அம்பளிப்பு . திரு . க . சுப்பிரமணிய ஐயரவர்கள்

Publishing Agency reserves to itself the right of republishing separately matters that appear in the Viveka Chintamani.




பேயவின் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : Om.

ஸத்யமே ஜெயம்—Satyameva Jayati.

புத்தகம் 12.] 1903ஹு மேமீ. [இலக்கம் 1.

THE TRUE BASIS OF MORALS.

## "சத்தியமின்றிச் சன்மார்க்கமில்லை."

"கண்காணியில்லென்றுகள்ளம்பலசெய்வார்
கண்காணியில்லையிடமில்லைகாணுங்கால்
கண்காணியாகக்கலந்தெங்குநின்றானைக்
கண்காணிகண்டார் களவொழிந்தாரே."—திருமந்திரம்.

"சத்தியமின்றிச் சன்மார்க்கமில்லை." சத்தியம்—அழியாதது; எப்பொழுதும் ...ாது: மாறாதது: எல்லையற்றது: இரண்டற்றது. இவை சத்தியத்தின் ஸ்வபாவங்களாம். ...ப் பஞ்சலக்ஷணங்களு மமைந்துள்ளதெதுவோ அதுவே சத்தியமாம். இவ்வைந்தில் ...றி குறையினும் மற்றவை பொருந்தாதொழியும். அழியாத்தன்மையில்லாவிடத்து மற்ற ...ம் பொருந்தியிருத்தல் கூடாமை. அழியும்வஸ்து எப்பொழுதும் உள்ளதாகாது; மாறாத் ...மையதற்கில்லை; எல்லையற்றதென்று அதைச் சொல்லுவதற்கில்லை; இரண்டற்றதென்றும் ...ல்லக்கூடாது: ஏனெனில் எப்பொழுது அழிவுண்டோ அப்பொழுதே அதற்கு உற்பத்தியு ...டு என்று ஏற்படுகிறது. இப்படியே நித்யத்துவமும் மற்றவையுமில்லையாம்; மற்றவையு ...ழியே. சன்மார்க்கம்—அழியாதமார்க்கம்: நன்மார்க்கம்; நன்னடத்தை. உலகத்தார் நன் ...த்தை யவசியமென்று கொண்டாடுகிறார்கள். ஆனால் நன்னடத்தை போதிக்கும்வழி ...னவென்று விசாரிக்குமிடத்துத் தடுமாறித்தத்தளிக்கிறார்கள். ஒவ்வொரு தேசத்தா ...ஒவ்வொரு ஜனசமூகத்தாரும் அவரவர்கள் பொதுக்ஷேமத்துக் கேற்றதென்று அவர்க

ளில் மேலோர் மதிப்பதை ஓர் தர்மநூலாகக்கொண்டு வழிபடுகிறார்கள். ஹிந்துக்களுக்கு மனுதர்மசாஸ்திரம், பாராசரஸ்மிருதி முதலியநூல்கள் தர்மவிதியுரைக்கும் நூல்களாகின்றன. யூதர்களுக்கு மோசே யென்பவரும் மற்ற தீர்க்கதரிசிகளும் குறிப்பிட்டுவைத்தவிதிகள் நன்னடத்தைக்குரிய நல்வழிகாட்டும் தர்மசாஸ்திரங்களாகின்றன. தற்காலத்தில் புத்திவன்மையால் பிரகிருதி விதிகளாம் தத்துவங்கள் பலவற்றைக் கண்டுபிடித்த மேற்றிசை நாகரிகர்களான ஐரோப்பியர்கள் முதலானோர் சென்ற இருநூற்றாண்டுகளில் தலைப்பட்டு விளங்கிய தத்துவசாஸ்திரிகளியற்றிய சன்மார்க்கநூல்களைப் பூர்விக தர்மசாஸ்திரங்களுக்குச் சமானமாக மதிப்பவர்களாக விருக்கிறார்கள். ஆதியில் மதக்குரவர்களாயிருந்து தர்மசாஸ்திரங்களேற்படுத்தினவர்கள் தீர்க்கதரிசிகளாக விளங்கினரென்பது பிரசித்தம். அப்படியே இக்காலத்து மேற்றிசைத் தத்துவசாஸ்திரிகள் தங்களுடையபுத்திவன்மையால் ஆராய்ந்து கண்டுகொண்ட அளவே உண்மையென்றும், மனிதன் தன் புத்திவன்மையால் பிரகிருதி தத்துவங்களை யறியக்கூடியது இவ்வளவேயென்றும் வரையறுத்து; இதற்குமேல் பூர்வத்தில் தீர்க்கதரிசிகள் கண்டதாகச்சொல்வதெல்லாம் ஜனங்களை மயக்கிக் கட்டுப்படுத்துவதற்காகச்செய்தசூழ்ச்சியேயன்றி அதில் உண்மை யெவ்வளவு மில்லையென்பது தங்கள் சித்தாந்தமாக ஸ்தாபித்து; அதைப் பரவச்செய்யுமாறு வேதங்களில் தீர்க்கதரிசிகளும், கிறிஸ்து, ஸ்ரீகிருஷ்ணன் முதலான தெய்வத்தன்மை வாய்ந்தவர்களும் சொல்லியவற்றில் அவர்கள் புத்திக்குச்சரியென்று பட்ட அளவுக்கு அங்கிகரித்து மற்றவற்றை நிராகரித்துத் தள்ளி; மதாசார அனுஷ்டானங்களாகப் பண்டைக்காலமுதலேற்பட்டு வழங்கிவந்தவைகளைக் கண்மூடித்தனமாயனுசரிப்பது மனுஷனுடைய புத்திக்கும் சத்திக்கும் குறைவுண்டு பண்ணுவதாயும் அவனுடைய பெருமையையும் சுதந்தரத்தையும் குறைப்பதாயும் சொல்லிப் பிரபல புத்தகங்கள் எழுதி அவர்களது புதுமையான எண்ணங்களைப் பரவச்செய்து வந்தார்கள். இவர்கள் முயற்சிபலிக்கவும், ஆதியில் தெய்வபக்தி யுண்மையில் இல்லாதவர்களுங் கூட அதைவெளிப்படுத்தினால் ஜனங்கள் தங்களை மதியார்களென்று தெய்வபக்தியுள்ளவர்களாக நடித்து வந்ததுபோல், இக்காலத்தில் பள்ளிப்பிள்ளைகளும் "தெய்வமுமில்லை ஒன்றுமில்லை; தெய்வமுண்டானால் அதைக்கண்டவர்யார்? முக்காலத்தில் தெய்வத்தை நேர் நேராகக்கண்டதாகச் சொல்லிய ஞானிகளெல்லாம் பகற்கனு கண்டு தலைதடுமாறிப் பிதற்றிய பேதைகள்: இக்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்ட பூதபௌதிக சாஸ்திர உண்மைகள் அவர்களுக்குத்தெரியா."— என்று வாய்மதம்பேசி தெய்வத்தையிகழ்ந்து, உண்டுடுத்துறங்குவதும், இத்தேகமுள்ளமட்டும் புலன் பொறிவழிகளால் அனுபவிக்கத்தக்க சுக மனைத்தையு மனுபவித்து ஆசை தீர்ப்பதுமே கருமமொழிய வேறு தேடத்தக்க தொன்றில்லையென்று வம்புதும்புபேசி வாதாடிப் பெரியோரை மதிக்காமல் சத்தியத்துக்குக் கட்டுப்படாமல் "கண்டதேகாக்ஷி கொண்டதே கோலம்" என்று காலந்தள்ளிவரத்தலைப்பட்டார்கள். இவ்வகைபார் கொட்டம் இந்தியாவில் இங்கிலீஷ்படிப்பு விர்த்தியாக ஆக அதிகரித்து தெய்வத்தை யிகழ்வதும் தான்தோன்றித்தனமாய்ப் பேசுவதும் ஏதோ புத்திவன்மையைக் காட்டும் குறிகளாக மதித்துப் புன்சொல் சொல்லிப் புத்திகெட்டலையத் தொடங்கினார்கள். இப்படி ஒரு தலைமுறை இரண்டு தலைமுறையாகவும் இதனால் பொதுவில் ஜனசமூகத்துக்கு விளையுங்கேடு எல்லாருக்கும் நன்றாகப் புலப்பட

லாயிற்று. கவர்னர்களும், கவர்னர்ஜெனரல்களும், இங்கிலீஷ் படித்தவர்களிடத்தில் இக்குறைகளைக்கண்டு இதற்குக் காரணம் காணத்தேடினர்கள். ஆங்கிலேயஉத்யோகஸ்தர்களும் பத்திராசிரியர்களும் முதலில், ஹிந்துக்களுடைய சுபாவமே கெட்டது: அவர்களைப் படிப்பிப்பதினால் அவர்களுடைய கெட்ட சுபாவங்களே தலையெடுத்து விளங்குகின்றன: இது ஜாதிசுபாவம், எளிதில் நீங்காத்தன்மையது: இவர்களுக்கு அதிகமாய்ப் படிப்புப் போதித்தல் கூடாதென்று முறையிட்டுக் கூறினார்கள். பிறகு இது வீண்அபவாதமென்று கண்டு போதனமுறையில்குற்றமிருக்கலாமென்று நினைத்து அதைச்சீர்திருத்தவேண்டுமென்று முயற்சித்தார்கள். பள்ளிப்பிள்ளைகளுக்குச் சன்மார்க்க விர்த்தியுண்டாக நீதிசாஸ்திரங்களும், நன்னெறி போதிக்கும் கட்டுரைகள், மூதுரைகள், நீதிக்கதைகள் முதலியவும் போதிக்கவேண்டுமென்று இந்தியாகவர்ன்மெண்டார் தீர்மானம்செய்து அந்தப்படியேநடந்துவர உத்தரவும் பிறப்பித்தார்கள். சீக்கிரத்தில்தானே இது பிரயோசனப்படாதென்று கண்டு கொண்டார்கள்.

சென்ற சிலவருஷங்களாகப் பள்ளிப்பிள்ளைகளுக்குச் **சன்மார்க்கபோதம்** செய்யவேண்டியதவசியமென்பது எல்லாராலும் ஒப்புக்கொள்ளபட்டும், சன்மார்க்க போதமில்லாக் குறை பெருங்குறையென்று எல்லாரும் குறைகூறி முறையிட்டும், அக்குறையை நிவர்த்திக்க வழியறியாது திகைத்து வார்த்தைமட்டோடு விட்டுவருகிறார்கள். 1901-வூத்தில் இந்தியாமுழுமைக்கும் 'பிஷப்பாக' நியமிக்கப்பட்டுவந்த டாக்டர் **வெல்டன்** போதனமுறையிலுள்ள குறையைக்கண்டு இதைநிவர்த்திக்க வழியில்லையென்று சும்மாவிடாமல், தனக்குயுக்தமாய்த்தோன்றினதைத் தைரியமாய் வெளியிட்டுப் பேசினார். அதாவது மேற்றிசைக்கிரந்தங்க ளெல்லாவற்றிலும் பைபிலுக்கு மிஞ்சிய சன்மார்க்க நூல் வேறில்லையால் எல்லாப்பாடசாலைகளிலும் அதைக் கட்டாயமாய்ப் போதித்துவருவது நலமென்றார். உடனேயெல்லாரும் அவரைத்தூற்றி அவர் இந்தியர்களை யெல்லாம் கிறிஸ்தவராக்கவெண்ணி சர்க்காரைக்கொண்டு தன்காரியத்தை முடித்துக்கொள்ளப்பார்க்கிறாரென்று இந்தியாமுழுதும் ஒரே கூக்குரலாகக்கிளம்பிற்று. மற்ற பிஷப்புகளும் கவர்னர்களும் கவர்னர் ஜெனரலும்கூட சன்மார்க்க போதனையில்லாக் குறையைப் பெருங்குறையாக மதித்து அதை நிவர்த்திக்கவேண்டிய தவசியமென்று ஒப்புக்கொண்டும், மதவிஷயத்தில் பிரவேசிக்க வேண்டுமென்கிற எண்ணம் தங்களுக்கில்லையென்றுகாட்ட டாக்டர் **வெல்டன்** பேசியது பிசகென்றும், சர்க்காருக்கு அவ்வித எண்ணமொன்றுமில்லை யென்றும் பிரசித்தப்படுத்தி அக்கூக்குரலையடக்கினார்கள். இதைப்பற்றி சென்னையில் வித்யாபிவிர்த்தியிலாகாத் தலைவராயிருந்த டாக்டர் **டங்கன்** லண்டனில் ஒரு பிரபந்தமெழுதி வாசித்ததில், சன்மார்க்க போதனையவசியமானாலும் இந்தியாவிலுள்ள மதபேதங்களின் காரணத்தால் சர்க்கார் பாடசாலைகளில் இப்பொழுதைப்போல உலகஞான மட்டுமே கற்பித்து வருவது சரியென்றும், சன்மார்க்க விர்த்திக்கு தெய்வ சிந்தனையே வேண்டியதில்லையென்றும் வாதித்தார். அப்பொழுது இது விஷயமாய்நாம் எழுதிய ஒரு பிரபந்தத்தில்* சன்மார்க்கத்துக்கு ஆதாரமாயுள்ளது தெய்வஞானமென்றும், ஆகையால்அந்த ஞானத்துக்கு ஏதுவான மதபோதனை எல்லாமதத்துக்கும் பொதுவாகவுள்ள

* *Vide* the paper on '*Religion and Ethics*' in the Madras Review for February, 1902.

வுண்மைகளைக்கொண்டு எல்லாப்பள்ளிக்கூடங்களிலும் பால்யவயது முதல் போதிக்கப்பட்டுவரவேண்டுமென்றும் வற்புறுத்திகூறினோம். அதை வாசித்துப் பார்த்தபின் அவர் சன்மார்க்கத்திற்கும் கடவுளுக்கும் சம்பந்தமேயில்லை யென்பது தமது சித்தாந்த மென்று நமக்கெழுதி நமதுகருத்தைமுற்றும் விளங்கவைக்கப் பின்னும் விஸ்தாரமாயெழுதும்படி கேட்டுக்கொண்டார். "தெய்வம் ஒன்றே: உண்மை ஒன்றே" என்பது எல்லாமதத்திலும் பொதிந்துகிடக்கும் உண்மையென்பதைநாமுணர்ந்துள்ளபோதும் அதை சித்தாந்தப்படுத்திக்காட்டவேண்டியதவசியமாயிருந்தது. ஆகையால் மேற்றிசையார் எல்லாரும் அனுஷ்டிக்கும் கிறிஸ்துமதத்தின் உண்மையையும்,வேதாந்த சித்தாந்த உண்மையையும்,தனித்தனியாராய்ந்துஅநுபவரீதியாயவற்றையுணர்ந்து, கிறிஸ்து போதித்ததும், கிருஷ்ணபகவான்போதித்ததும்அநுபவரீதியாய்ப் பார்க்கில் ஒன்றே—ஒரு உண்மையே—வழியும் உண்மையில் ஒன்றேயென்று பிரத்தியக்ஷமாயெடுத்துக்காட்டி ஆருத்ராதரிசனத்தன்றுஅதைப்பற்றி விசேஷமாக வெடுத்தெழுதிப்பிரசுரிக்கலானோம். இவ்வுண்மையை டாக்டர் டங்கனும் விவேகசிந்தாமணியைப்பார்த்துணர்ந்தபின் உண்மையில் நம்கொள்கைக்கும் அவர்கொள்கைக்கும் வித்தியாசமில்லையென்று காண்பதாக வெழுதியிருக்கிறார். சீமையில் தற்காலம் ரஜாவிலிருக்கும் இந்தியா சிவில் ஸர்விசைச்சேர்ந்தவரும், தமிழறிந்தவரும் ஆதிமுதல் விவேகசிந்தாமணியை ஆதரித்து வருபவருமான ஒரு ஆங்கிலேய நண்பரும் நாம் வேதாந்த சித்தாந்த முடிவாகவெடுத்துக்காட்டிய உண்மைகளும், கிறிஸ்துபோதித்த உண்மைகளும் ஒன்றேயென்று கிறிஸ்துமதபக்தரும் ஒப்புக்கொள்ளச் சரிப்பட்டதாகவும், அவர் எல்லாமதங்களின் உண்மையும் ஒன்றேயாக, வித்யாசங்கள்உண்டானதெல்லாம் மனிதன் தன்பேதபுத்தியால் ஏற்படுத்தியதன்றி உண்மையில் காணவில்லையென்று காண்பதாகவுமெழுதியிருக்கிறார். இப்படியே வேதாந்த சித்தாந்த யோகிகளும் ஞானிகளும் கிறிஸ்து போதித்தஉண்மையை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இப்படியாக அநுபவரீதியாகப் பார்க்குமிடத்து உண்மையெல்லாம் ஒன்றே; ஆத்மவித்தை எல்லாருக்கும் பொதுவானதே; ஸ்வாநுபவமட்டுமிருந்தால் எம்மதத்தை யநுசரித்துமுண்மையையுள்ளபடி போதிக்கலாமென்பது ஸ்பஷ்டமாக வேற்பட்டது. இதை மேன்மேலும் இப்பத்திரிகை மூலமாக நிரூபித்துக்காட்டி வருவோம்.

**சன்மார்க்கம்** சன்மார்க்கமென்று எல்லாரும் சன்மார்க்கத்தை விரும்பிப் பேசுகிறார்கள். புறக்காரணங்களை முன்னிட்டு சன்மார்க்கவழியை யநுசரிக்கச் செய்வது ஒரு நூற்றாண்டு முழுவது முழைத்தபின் கூடாத காரியமென்றேற்பட்டு விட்டது மற்றோரிடத்தில் "பாலபோதம்" என்னும் தலைப்பின்கீழ் விவரமாய்க் கண்டெழுதியிருப்பதால் விளங்கும். ஆகவே சன்மார்க்கத்தை யநுசரிக்க ஆதாரமான சாதகங்கள் மனிதன் உள்ளத்தினுள்ளேயேயிருத்தல் வேண்டும். உள்ளத்தை யொட்டியுள்ள காரணங்களேற்படில் மனிதன் தானாகவே யந்தவழியில் நடப்பது சகஜமாகும். அதற்கு மனிதன் தன்னைப்பற்றிய உண்மையை உள்ளபடி யறியவேண்டும். "**தன்னையறிந்தவன் தலைவனாவான்:**" தன்னையறிய ஆத்மவித்யாபோதமவசியம். ஆத்மவித்யாபோதமே மதசித்தாந்தங்களின் நோக்கமும்முடிவுமாம். மூடர்கள் கெட்டுப்போகாதபடி முன்னோர் ஸ்வர்க்கநரகாநுபவங்களை வர்ணித்தெழுதி வினையின் பயனை விளக்கியிருந்தார்

கள். இப்பொழுதுவரவர புத்திவிர்த்தியதிகமான தால்அந்த சூக்ஷமம் பூசிக்கத்தக்கதாயில்லை, ஆகையால்உண்மையையுள்ளபடியெடுத்துப்போதிப்பதேமேலான மார்க்கமாம். உண்மையாவது சத்தியம். சத்தியமாவது, "ஓம். தத்ஸத்" என்னும்வாக்கியத்திலடங்கியுள்ளது: "ஓம்—அது உள்ளது." அது வென்றால்ஏது? இக்கேள்விக்குச்சரியான உத்தரம்கண்டுபிடிப்பதே சத்தியத்தை யறிவதாம். அதுவே" ஏகம் ஸத்யம் ப்ரம்ம" என்னும் சுருதிவாக்கியத்தின் பொருளாம். "God is the spirit of truth" என்று யேசு கிறிஸ்து சொல்லியதும் அதையே

"அதுவென்று லெதுவெனவொன்றடக்குஞ் சங்கை யாதலினு லதுவெனலு மறவேவிட்டு
மதுவுண்டவண்டெனவுஞ் சனகனுதி-மன்னவர்கள் சுகர் முதலோர் வாழ்ந்தாரென்றும்
பதியிந்தநிலை யெனவு மென்னையாண்ட படிக்கு நிரு விகற்பத்தாற் பரமானந்த
கதிகண்டு கொள்ளவுநின் னருள்கூர் இந்தக் கதியின்றியுறங்கேன்மேற் கருமம் பாரேன்."

என்று உள்ளமுருகப்பாடியுள்ளார் தாயுமானசுவாமிகள். ஆதலால் சங்கையற அதையறிவது மஹாகஷ்டம். ஆனல் ஹிருதய சுத்தியும், காருண்யமும், அன்பும் நிறைந்துள்ள சீவனுக்கு அதையறிவது சுலபமாம். சிந்தையைத்தூய வழியிற் செலுத்திக் கொண்டேபோனுல் அது முடிவில் சத்தியத்திற் கொண்டுவிடும். தெய்வமுண்டென்றாலும் சரி, இல்லையென்றாலும் சரி,—தூயநெறிசெல்வார் கடவுளை யடைவார்—சித்தந்தெளியில் சிவனைக்காணலாம்; சத்தியத்தையறியலாம்; அகத்தூய்மையொன்றே முக்கியம். அதுவும் "வாய்மையால் அகம் தூய்மையாம்:"—என்றபடி வாய்மை (உண்மை) யால் சித்திக்கத்தக்கதாம்.

"செல்லுமளவும் செலுத்துமின் சிந்தையை
வல்லபரிசாலுரைமின்கள் வாய்மையை
யில்லையெனினும் பெரிதுளனெம்மிறை
நல்லவரனெறி நாடுமினீரே."

"ஒன்றேகுலமொருவனேதேவனும்
நன்றேநினைமினமனில்லை நாணுமே
சென்றேபுகுங்கதியில்லை நுஞ்சித்தத்து
நின்றேநிலைபெறநீர்நினைந்துய்மினே."—திருமந்திரம்.

யென்றார் திருமூலநாயனாரும். கிறிஸ்துவும் "Love is the fulfilment of all laws." "அன்பிலமர்ந்துறைய எல்லா தர்மங்களும் நிறைவெய்தும்" என்றார். "God is love" "அன்பே அவன்" என்றதனாலும், அன்பின்வழியே சத்தியத்தைக் காணலாம்; "அல்லது அன்பு பரிபூரணமானவிடத்தே சத்தியம்" என்றதனாலும் எல்லார் போதனையும் ஒன்றேயென்பது ஸ்பஷ்டமா யேற்படுகிறது. ஆகையால் சத்தியத்தில் பற்றில்லையேல் சன்மார்க்கத்திலும் பற்றில்லாதொழியும். சத்தியத்தை நேசித்தார் சன்மார்க்கத்தைத் தாமே நேசிப்பார். அவருக்கு சத்தியநேசம் தவிர வேறு தூண்டுகோல் வேண்டியதில்லை. சத்தியத்திலுள்ள நேசம் சன்மார்க்கத்தை விர்த்திசெய்யும்; சன்மார்க்கவிர்த்தி சத்தியத்தை அதிகமாக நேசிக்கச்செய்யும். இப்படி ஒன்றுக்கொன்று ஆதாரமாயிருந்து ஒன்றையொன்று வளரச்செய்யும். ஆகையால் "சத்தியமின்றிச் சன்மார்க்கமில்லை" யென்பதினுண்மையை யாவராலும் மறுக்கவொண்ணது. ஆத்மாவின்றித்தேகமில்லை; தேகமென்பது கருவிகரணங்களமைந்த ஒரு ஆயுதம் போலாம்; அதையுபயோகிப்பவன் ஆத்மா. அவன் அநாதியாயுள்ளவன். பிறப்பிறப்பற்றவன். ஆகையால் தேகமனேதத்துவங்களோடு ஆத்மதத்துவங்களையு மறியவேண்டியதவசியம். கருவி கரணங்களின் விர்த்தியெல்லாம் ஆத்மவிலாசம் வெளிப்பட்டு விளங்குவதற்காகவே அதை மறந்து விட்டால் பயிற்றும் வித்தை பயனற்றதாகிறது.

# The Gospel of the Holy Mother.

## As presented by Her to Her Blessed Child and Son.

*On the Day of the Cleansing of the Spirit, 00.*

*(With the First Dawn of the 20th Century.)*

# ஆனந்தத்தாய்மொழி.

அவள் தன் திருவருட் குழவிக்கோதிய மந்திரம்.

"அன்னைசொன்மிக்க மந்திரமில்லை."



## 5-வது; முத்திமப்பருவம்——சித்திப்படலம்.

" ஆள்வன் குருவாய் வந்தாங்காரம் போக்குவிப்பன்
மாள்வன வெல்லாமயக்க மறக்காட்டுவிப்பன்
தாள் தந்தருளீவன் தாகவிடாய் தீர்த்து வைப்பன்
ஆளாவானைக்கூட்டி மாளா வரமளிப்பன்."

### ஆனந்தானுபவக் காட்சி.

ஆனந்தத்தாயாரோ டைக்கியமேயானபின்பு
நான் கண்ட கண்ட காட்சி யென்ன!
கனவுநன வழிந்ததென்ன!
நிஷ்டையுண்டு நித்திரை போச்சு,
நான்முகனும் ஓடிப்போனான்;
இந்திரனும் யாரோ எச்சிற் கலைதின்னியவன்
கண்டறியேன் கேட்டறியேன் காண நினைத்தறியேன்;

46சிவனாரோ வாசற்காப்பான் விஷ்ணுவுமொரு வேலைக்காரன்;
இந்தவேலைக்காரப் பசல்களோடே வேலை யென்ன எனக்குச் சொல்லேன்!

47என் ஆனந்தத்தாயாரே எனக்குப் பெரியவள் காண்.
தாய்பிள்ளை யென்று சொல்லும் தடையு மறுத்து விட்டேன்;

---

46. "சிவனாரோவாசற்காப்பான்" c. f.

சிவனைவழிபட்டாரெண்ணிலிதேவ
ரவனைவழிபட்டாங்காமாறொன்றில்லை
யவனைவழிபட்டங்காமாறுகாட்டுங்
குருவைவழிபடிற்கூடலுமாமே.

47. "என்ஆனந்தத்தாயாரேஎனக்குப்பெரியவள்காண" c. f.

குருவேசிவமெனக்கூறினனந்தி
குருவேசிவமென்பதுகுறித்தோரார்
குருவேசிவனுமாய்க்கோனுமாய்நிற்குங்
குருவேயுரையுணர்வற்றதோர்கோவே.

48 அவளே நான் நானேயவள் அப்புறம் தான் வழக்கேது ?
வழக்கில்லை யானாலும் வழிதேடவேணும்நான்.
அவளாரோ நானாரோ அவளுமில்லை நானுமில்லை :
அப்படியிருக்க, ஆசை யென்ன என்கிறையோ ?
அன்பேயவளாகி அன்புருவாயவதரித்தாள் :
அன்புருவாயவதரித்தாள் அவளருங்கருணை மிகுதியினால்.
49 கருணை மிகுதியினால் கடைந்திட்ட பாலமுதம்
உண்டுகளிப்பது நானுண்மையே யானாலும்
உண்மையதுவல்ல உள்ளதுவு மதுவல்ல.
உள்ளதையுள்ளபடி யுள்ளாய்ந்து பார்த்தாக்கால்,
இன்னுமிருக்குதுபார் எனக்கு வழிதேட.
வழிதேடி யலையாமல் வழிகாட்டி யழைத்ததனால்,
காட்டிய வழியதனைக் கனவுநனவழிந்து
பக்தியுடனாராய்ந்து புத்தியினாலறிந்து கொண்டேன்;
ஆராய்ந்தறிந்து கொண்டு அறிந்தவழியே நடந்தேன்
நெருப்பாறு கடந்தேன்நான் நடந்தேன் மயிர்ப்பாலமதில்
நெருப்பாறு மயிர்ப்பாலம் நான்கடந்த வகையதனை
50 உரைத்திட்டாலுணர்வீரோ உண்மைகெட்டமானிடரே !

ஃ

மானிடவுருவானாலு மதிலெத்தனை ஜனமமமமா :
காண்டாமிருக முதலாகக் காக்கைகழுவீறாக
எண்ணித் தொலையாத எத்தனையோ ஜன்மங்கள் !
சொல்லித்தொலையாத சேதனா சேதனங்கள் !
இத்தனையுமாராய்ந்து இழவெடுத்துக் கொண்டிருந்தால்,
நான் வழிதேடிப் பிழைப்பதெப்போ வகையறிந்து பிழைப்பதெப்போ !

ஃ

உரைத்ததையுணரார் ஊனர்களேயானாலும்
என்னைப்போலலைந்திடுவோர் ஏங்கித்தியங்கிடாமல்
* உள்ளத்தையுள்ளபடி யுரைத்திடுவேனாசிமுனை வாயாலே :

---

* "உரையற்ற தொன்றையுரை செய்யுமூமர்காள்"—திருமூலர்.

"அவளேநான்நானேயவள் அப்புறம்தான்வழக்கேது" c. f.
தானவனாகிச்சொரூபத்துவந்திட்டு
வானசொரூபங்கணன்குமகற்றின
வேனையமுத்திரையீந்தாண்டநன்னந்தி
தானடிமுற்சூட்டித்தாபித்ததுண்மையே.

49. "கருணைமிகுதியினால்கடைந்திட்டபாலமுதம்உண்டுகளிப்பது" c. f.
இசைந்தெழுமன்பிலெழுந்தபடியே
பசைந்தெழுமீசரைப்பாசத்துளேகச்
சிவந்தகுருவந்துசென்னிகைவைக்க
வுவந்தகுருபதமுள்ளத்துவந்ததே.

50. "உரைத்திட்டாலுணர்வீரோ" c. f.
இதயத்துநாட்டத்துமென்றன்சிரத்துப்
பதிவித்துபாதம்பராபரநந்தி
கதிவைத்தவாறுமெய்காட்டியவாறும்
விதிவைத்தவாறும்விளம்பவொண்ணாதே.

51 அம்பாளை வழிபட்டு நெருப்பாறு தாண்டினேன் நான்
அவளுக்கு விட்டவழி யெனக்குமேயாச்சுதுகாண்.
மயிர்ப்பாலம் தாண்டிய மர்மத்தைச் சொல்லிடுவேன்
அன்புடனேகேட்டு அன்புள்ளே வைத்திடுவீர் :
அம்மாளே யுண்மையென்றேன்
அவளே நானுய்விட்டேன்.
52 அவளே நானபோது அப்புறம் நானென்சொல்வேன் !
கடத்தல் கனகஷ்டமையா
இத்தடைகளிரண்டையும் :
கண்கள் தானும் குருடாகும்—
கால்களுமே யுதவாது.
கண்கள் கேட்டுக் குருடானேன்—
குருடாய்த்தான் வழிகண்டேன்.
கால்களின்றி முடமானேன்—
முடமாகியே வழிநடந்தேன்.
முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டால் கிட்டாதோ ?
ஆசைப்பட்டதுண்மையானல் அவசியம் கிடைத்திடுமே.
குருடனுமே வழியறிதல் கூடாதகாரியமோ ?
53 கண்கெட்ட குருடனுக்குக் கோலேகாண் அவன் கண்கள் :
கோலதுமே கண்களானல் அவனைக் குருடனென்பதெப்படிச் சொல் ?
இரண்டு கண்கள் தானிருந்தும் இருட்டில் வழிநடப்பாரோ ?
கண்கெட்ட குருடனே கைவீசி நடந்திடுவான் :
இப்படியிருக்கையிலேயேனுங்கட் ககம்பாவம் !
அகம்பாவம் பிடித்தையா நீங்கள் அழிந்தேதான் போகிறீர்கள் ;

ஃ

அகங்காரத்தை விட்டொழித்தால் அறிவீர் நீர் அதிசயத்தை
அதிசயத்தைக் கண்டு ஆச்சரியப்படுவீர் நீர்
ஆச்சரியப்பட்டு அகமகிழ்ந்து சிரித்திடுவீர் ;

---

51. "அம்மாளைவழிபட்டுநெருப்பாறுதாண்டினேன்நான்." c. f.
வைத்தேனடிக்கண்மனத்தினுள்ளேநான்
பொய்த்தேயெரியும்புலன்வழியேகாம
லெய்த்தேனுழலுமிருவினைமாற்றிட்டு
மெய்த்தேனறிந்தேனவ்வேதத்தினந்தமே.

52. "அவ்ளேநானபோதுஅப்புறம்நானென்சொல்வேன்" c. f
வரும்வழிபோம்வழிமாயாவழியைக்
கருவழிகண்டவர்காணுவழியைப்
பெரும்வழியாநந்திபேசும்வழியைக்
குருவழியேசென்றுகூடலுமாமே.

53. "கண்கெட்ட குருடனுக்குக்கோலேகாண் அவன்கண்கள்" c. f.
மேவியவந்தகன் விழிகட்குருடனு
மாவையின்முன்னடிக் காணுமதுகண்டு
மேவுந்தடிகொண்டு சொல்லும்விழிபெற
மூவையினுன்மாமுயலுங்கருமமே.

சிரித்திட்டு நீங்கள் சீர்பாதம் பெற்றிடுவீர்;
சீர்பாதத்திருந்தால் சின்மயத்தை யுணர்வீர் நீர்;
சின்மயத்தை யுணர்ந்தக்கால் அதையறிய மிக ஆசைகொள்வீர்;
அறிவுமோகமுண்டானால் முகதரிசன மாகுமையா;
முகதரிசனமானால் மோகம் பிறந்திடுமே;
மோகம் பிறந்திட்டால் உருவமது அமர்ந்துவிடும்;
அமர்ந்துவிடு முருவமானால் அன்பு நிலையறிந்திடுவீர்;
அன்பு நிலையறிந்தாக்கால் ஆசைவருமனுபவிக்க;
அனுபவிக்கப் புறப்பட்டால்,
அங்கம் புலர்ந்து அகமகிழ்வு கொள்வீரே.
அகமகிழ்வு கொண்டபின்னும் அடங்கவில்லை யுன்மோகம்!
ஏனென்று ஆராய்ந்தால் இன்ப சுகம் கிட்டவில்லை.
இன்பசுகம் கிட்டவே யந்தரங்கமறியவரும்;
அந்தரங்கமறிந்து விட்டால்—
அப்புறம் சுகமே தான்.

ஃ

சுகமே தானானாலும் சுகமென்றால் தித்திக்குமோ?
தின்னறிய வேண்டியது இன்பசுகரசமதனை.*
இன்பசுகரசமதனைத் தின்னுருசியறிந்தாலும்

**அறிந்த அறிவழிய வேண்டும்——**
அப்புறந்தானையா சுகம்.
அந்தசுகமதனை யறிந்துசொல்வதெப்படிச் சொல்!†
அறிவழிந்த சுகமதனை யனுபவித்தேயறிய வேண்டும்.

ஃ

அனுபவம் சித்தித்தால் அப்புறமே யொன்றுமில்லை;
ஒன்றுமில்லையானாலும் ஆனந்தக் கொழுப்பேறும்;
கொழுப்பேறி யடங்கிவிட்டால்—
மத்தித்து இருந்திடலாம்.
மத்தித்திருப்பதுவே மஹாதீத நிலையம்மா.
மத்தித்திருக்குமிந்த மஹாதீத நிலையெனக்கு
எப்போது சித்திக்குமென் றென்மாதாவை நான்கேட்டேன்.

* C. F. "Verily, Verily, I say unto you, Except ye eat of the flesh of the Son of man, and drink his blood, ye have no life in you." "He that eateth of this bread (the bread of life) shall live for ever"—*Jesus Christ.* John VI, 53, 58.

† Cf. *Socrates'*: "What God is, I know not, what he is not, I know." And நேதிவாக்கியம் in *Sruti.*

ஃ

"மோகமடங்கவேணும் மெய்யுருவங்காணவேணும்
"மெய்யுருவங்கண்டு அன்பு நிலையறியவேண்டும்
"அன்பு நிலையறிந்து அந்தரங்கமாகவேண்டும்
"அந்தரங்கமாய்விட்டால் அனுபவமே சித்திக்கும்;
"சித்திக்கும் மெய்சொன்னேன் சித்தங்கலங் காதே" யென்றாள்—

ஃ

"சித்தந்தானழிந்ததுவே யதைப்பற்றி யேன்விசாரம்?"
என்று நானறைந்ததற்கு என்தாயார் என் சொன்னாள்:
புன்சிரிப்புத் தவழுமவள் இன்பமுகம்மலர
"போக போகப் பொன்னம்பலமாம்" என்றாள்.

ஓம்தத்ஸத்.ஸத்குருவேநம:

---

PRIMARY EDUCATION.

## பாலபோதம்.

பிரதமவித்யாபாடசாலைகளில் சிறுவர்களுக்கு வித்தை போதிக்கப்படும் முறையைச்சீர்திருத்தவேண்டியதைப் பற்றி மிஸ்ஸஸ் கோர்ட்னைட் விடாது தொடர்ந்தெழுதிவருவதைப் பார்க்கச் சந்தோஷப்படுகிறோம். அதிகாரிகள் இங்கிலீஷில் எழுதுவதையே நேரில் வாசித்துக் கவனிப்பது அவர்களுக்கு இலகுவாயிருக்குமாதலால்இத்துரைசானிஅமெரிக்காவின் மேலான அனுபவத்தை மேற்கொண்டு, பொட்டைப் பாடமாக நெட்டுருப்போட்டுவைக்கும் கெட்ட வழக்கத்தைவிட்டு, குழந்தைகளை வளர்ப்பதிலும் அவர்களுக்கு வித்தைபோதிப்பதிலும் அவர்களுடைய ஆத்மவிலாசம் விளங்கும்படி முறையறிந்து நடந்துகொள்வதேஉண்மையானபோதனமுறையாமென்று வற்புறுத்தி இம்முறையை முதல் முதல் மேற்றிசையில் கண்டுபிடித்துத்தாபித்தவரான ப்வெடரிக்ப்ரோபெல்அவர்களுடைய உண்மையான சித்தாந்தங்களைஉள்ளபடி யெடுத்துரைத்துவருவதில் வெகு சிரத்தையெடுத்துக்கொண்டு அதியுற்சாகத்தோடுழைத்துவருகிறார். சென்ற ஏப்பிரல் மாசம்வெளியான (Indian Journal of Education) என்னும் பத்திரிகையில் பாலபோத முறையையும் அதன் அவசியத்தையும் பற்றி இரண்டு நூற்றாண்டுகளின் அனுபவத்தை யாராய்ந்து உண்மையை யுணர்த்திப்பேசுகிறார். அமெரிக்காவில் வித்யாபோதனவிஷயமாய்ச்செய்தமுயற்சிகளின் பயனை டாக்டர்ஹிர்ஸ்ச்என்னும் வித்யாவிற்பன்னர் ஒருவர் உள்ளாராய்ந்துஉண்மையைவெளியிட்டிருப்பதை யங்கீகரித்துஎடுத்துக்காட்டுகிறார். சுருங்கச்சொல்லில் அதன்கருத்து: 18-ம் நூற்றாண்டில், மன்பதையில் குற்றங்களும் குறைகளும் மலிந்து நிறைந்துகிடப்பதற்குப்பரிகாரம் படிப்பு ஒன்றே என்று நம்பினார்கள். வித்தைப்பயிற்சியினால் எல்லாக்குறைகளும் குற்றங்களும் நீங்கிவிடும் என்று அக்காலத்திலுள்ளபிரதம வித்வான்களும் விற்பன்னர்களும் நம்பினார்கள். ஆகவே அவர்கள் எண்ணம் பரவிப் பலன் படலாயிற்று. 19-ம்நூற்றாண்டில் அவர்களுடையஎண்ணங்களெல்லாம்நிறைவெய்தலாயிற்று. எல்லாரும் எழுதிப்படிக்கக்கற்

னால் மன்பதையிலுள்ள குறைகளெல்லாம் நீங்கிவிடுமென்று அவர்கள் எண்ணியெண்ணியேங்கிய ஏக்கம் 19-ம் நூற்றாண்டின் முடிவில் காரியசித்தியானதினால் நீங்கியது. அமெரிக்கா யூனைடெட்ஸ்டேட்ஸில் எழுதப்படிக்கத்தெரியாதவர்கள் வெகு அபூர்வம். சகலருக்கும் அக்ஷராப்பியாசம் செய்வித்து எழுதப்படிக்கப்போதிக்கவேண்டுமென்று அவர்கள் ஆசைப்பட்டது நிறைவேறியது. ஹைஸ்கூல், யூனிவர்ஸிடி வித்தைகள் அதாவது பிரதம வித்தையும் மத்ய உயர்தரப்படிப்பும் அதிகமாய்ப் பரவவேண்டுமென்று அவர்கள் கொண்ட நோக்கமும் நிறைவேறியது. ஆனால், இவைகளினாலுண்டாகுமென்று அவர்கள் திண்ணமாய் எதிர்பார்த்த சுகிர்தங்கள் மட்டும் உண்டாகவில்லை. மன்பதையிலுள்ள குற்றங்குறைகளும் குறையவில்லை. புத்திகூர்மைப்படக்கூர்மைப்பட, பொய், களவு, மோசம், முதலான பாதகஞ்செய்யும் குற்றவாளிகளும் அவர்கள் தொழிலை முன்னிலும் அதிக புத்திகூர்மையோடுசெய்து வந்தார்களேயன்றி அவர்கள் குற்றத்தைவிட்டுச் சீர்திருந்தினாரில்லை. ஆகவே 19-வது நூற்றாண்டின் முடிவில் படிப்பினால் மட்டும் மனிதன் சீர்திருந்துவான் என்று எண்ணினது பொய்யென்று ஸ்பஷ்டமாகப்பட்டது. இப்பொழுது நடக்கும் 20-வது நூற்றாண்டில் அமெரிக்காவில் பொதுஜன வித்யாபோதனாப் பொறுப்புள்ளவர்கள் இதுவரையில் நடத்தப்பட்ட வித்யாபோதனா முறையில் உள்ள குற்றத்தைக்கண்டு ஒப்புக்கொண்டு, இந்த நூற்றாண்டு முதல் அக்குற்றத்தை நீக்கி உண்மையான வழியை அனுசரிக்க முயலுகிறார்கள். 19-வது நூற்றாண்டில் கற்றுக்கொண்ட உண்மையென்னவெனில், ஆத்மவிர்த்தியைக்கவனிக்காது; மனத்தையும் புத்தியையும் மட்டும் படிப்பினால் கூர்மைப்படுத்தி வருவதினால் பிரயோசனமில்லை. மனிதன் அதனால் சீர்ப்பட்டு உயர் நிலையடையாமல், முனனிருந்த நிலையிலேயேயிருந்து முன்செய்த குற்றங்குறைகளை இன்னும் சாமர்த்தியமாகச்செய்துவருகிறான்: ஆகையால் இளங்குழந்தைகளுக்கு வித்யாபோதனை செய்வதில் அவர்களுக்கு விஷய ஞானமுண்டாக்குவதையே பெரிதாகவெண்ணாமல் விஷயானுபவத்தால் அவர்களுடைய ஆத்மவிலாசம் வெளிப்பட்டுப் பிரகாசிக்கும்படிச்செய்யவேண்டுமென்பதேயாம். இதை நமது பூர்வீக ரிஷிகளது வாக்கில் சொன்னால், தெய்வசிந்தையின்றி சுத்தநாஸ்திகப் படிப்பு பொதுவாய் ஜனங்களுக்கு நன்மையைப்பயக்காது என்பதாம். இதை கிண்டர்கார்டன் முறையையனுசரிப்போர்வாக்குப்பிரகாரம் செப்பின், விஷய ஞானத்தினும் ஸத்வகுணவிர்த்தியே விசேஷபயன்தந்து மனிதனைமேலே தூக்கிவிடும்தன்மையதாகும். இந்த உண்மையை தேசப்பொதுவிலனுபவரீதியாயுணர இரண்டு நூற்றாண்டுகள் அல்லது 200-வருஷங்கள் சென்றன. இப்படியே மனிதர்கள் பிரத்தியேகமாகவும் பிழைசெய்ததின் பயனையனுபவித்து உண்மையை யுணர்கிறார்கள். உண்மையை யுணரவும் அவர்கள் வாழ்க்கையுடனே மாறிவிடுகிறது. இந்த இருநூறு வருஷ அனுபவத்திற் கண்டவுண்மையையே ஒருவர் ஸ்வானுபவத்திற்கண்டு பின்வரும் மூன்று வரிகளில் அழகாய்த் தீட்டியிருக்கிறார்:—

"கேற்றுத்திருவருள் வாக்கை நான் நோக்காவிட்டேன்
"பரம்பொருளதனைப்பார்க்காய் விட்டான்
"பெற்றேன் பிழைத்தேன் பரம் பொருளை யினித்தானு
மசட்டை செய்வேனோ நான்."

அமெரிக்காவில் வித்யாபோதனா விஷயத்தில் முதன்மையாயுள்ளவர் எண்ணமும் கொள்கையுமிதற்கொத்ததாகவேயிருக்கிறது.

இன்றைக்கவர்கள் மனோபாவம் என்னவெ

ளில், நேற்று (போனகாலத்தில்) ஆத்மக்ஷேம விர்த்தியைநாடாது, தேகமனோவிர்த்தியையே நாடியுழைத்தோம்; அது உத்தேசித்த பலனைக் கொடுக்காது தவறிப்போய்விட்டது: போனது போயிற்று; இனிக்கருவிகரணங்களைக்கொண்டு ஆத்மவிர்த்தியையே முதல் நோக்காக்கொண்டுழைப்போம்: இனி ஆத்மாவை அசட்டை செய்யவொண்ணாது. நாம் ஆத்மவிர்த்தியென்றுசொல்வதை அவர்கள் "Character building" என்கிறார்கள்; இதை ஸத்வகுணவிர்த்தியென்று சொல்லலாம். எப்படிச்சொன்னாலென்ன. அனுபவத்தில் எல்லாமொன்றையே குறிக்கிறது. ஏட்டுச்சுரைக்காயாகவிருக்குமட்டுந் தான் இல்லாத வில்லங்கங்களெல்லாம். ஏட்டுச்சுரைக்காயைக்கறிசெய்ய யோசிப்பவர் எப்போதும் தாறுமாறாகவே யோசனைசெய்து ஒருவரையொருவர் தூற்றித்திரிவர். கொடியில் காய்த்தசுரையானால்சமைக்கச்சமைக்கப்பக்குவபாகம் இன்னதென்று தானேதெரியவரும்.

அமெரிக்காவில் இந்த உண்மையை என்னமாகக் கண்டு பிடித்தார்களென்றால், போலீஸ், ஜெயில் முதலான குற்றவாளிகளைத் திருத்துவதற்கான இலாகாக்கள்என்னமாயுண்டாயினவென்று தீர ஆலோசித்து, காரணத்திலிருந்து காரியமுண்டானது நிச்சயமாதலால், காரியத்திலிருந்து காரணத்தை விசாரித்துக் கண்டு, காரியத்துக்குக் காரணமும், அந்தக் காரணத்தைக் காரியமாக்கி அதற்குக் காரணமுமாக இப்படியே ஒன்றைத் தொட்டொன்றாகத் தொடர்ந்து பிடித்து விசாரித்துச் சென்றார்கள். இப்படி விசாரித்துச் சென்றதில் பாலப்பருவம், வளரும் பருவத்தில் சிறுவர்களுக்குச் சரியானபடி வித்தை போதித்தல், அதாவது அவர்கள் உள்ளம் உண்மையான வழியைப்பற்றிச் செல்லும்படிச் செய்யல்— இதெல்லாம் ஆத்ம விர்த்தியையே காட்டும்— இராஜ்ஜிய க்ஷேமத்துக்கு மிகவும் அவசியமென்று கண்டார்கள். காணவும், உடனே அதை யூர்ஜிதத்துக்குக் கொண்டுவரத் துவக்கினார்கள். இப்படி எண்ணித் துணியும் ஆற்றலும் துணிந்ததைத் தொடுபிடியாய்த் தொட்டுச் செய்யும் சக்தியும் வாய்ந்த அமெரிக்கர்கள் பொதுஜன வித்யா போதனா விஷயத்தில் இம்மேலான குணங்களமைந்திருப்பது பற்றி உலகில் தலைமை வாய்ந்து உண்மை நெறியில் வழிகாட்டிச் செல்லும் சிலாக்கியம் பெற்று விளங்குகிறாரென்று மிஸ்ஸஸ் கோர்ட்ரைட் துரைசானி உள்ளத்திற்பட உண்மை விளங்க எடுத்துரைத் தெழுதியிருக்கிறார். அமெரிக்கா இதரதேசத்தாருக்கு இது விஷயத்தில் போதிக்கும் நீதி யென்னவெனில், வித்யா விஷயத்தில் செய்யப்படும் எல்லா முயற்சியும் ஸத்குண விர்த்திக்கு அனுகூலமாக விருக்க வேண்டியது. * அதாவது வித்யா இலாகா விதிகளுக்குத் தக்கபடி பிள்ளைகளைப் பழக்காமல், பிள்ளைகளின் ஜீவபாவத்திற்குத் தக்கபடி அவர்களின் ஆத்மவிலாசம் வெளிப்படுவதற்கு அனுகூலமானவிதமாக முறையறிந்து அவர்களைப் பழக்கவேண்டும்.

உயர்தர (கலாசாலைப்) படிப்பைவிட, குழந்தைப் பிராயத்திலும் வளர் பிராயத்திலும் சிறுவர்களை முறையறிந்து பழக்கி அவர்களிடத்துப் பூர்வ வாசனையாலுண்டான குணக்கேடுகளை யறிந்து அவைகளைக் கூடியவரையில்

* The most essential principle...is that of making other instruction subservient to the training which makes for character in the individual. This means that the child is no longer to be bent to the unyielding code, but that the method is to be adapted to meet the demands of the developing soul. (Mrs. Courtright in I. J. Edn: p. 194).

ஆத்ம க்ஷேம விர்த்திக்கனுகூலமான வழியை யனுசரித்துத் திருத்தி அவர்களை சன்மார்க்கத்தில் திருப்புவது இராஜ்ஜியப் பொதுவிற்கு அதிக நன்மையபக்குவதாயும் அதிகப்பிரயோசனமுள்ளதாயுமிருக்கிற தென்பதை அமெரிக்கர்கள் உண்மையிலுள்ளபடி கண்டு பிடித்தனுசரிக்கத் துவக்கியிருக்கிறார்களென்கிறார். பாலப்பருவத்தில் சிறுவர்களைச் சீர்திருத்தாது விட்டு அவர்கள்வளர்ந்தபின் அவர்களிடத்துள்ள குணக்கேடுகளைத் திருத்த போலீஸும், மாஜிஸ்திரேட்டும், ஜெயிலும் ஏற்படுத்துவது, முளையில் கையால் கிள்ளக்கூடியதை முதிரவிட்டு அனேக ஆள்களைவிட்டுக் கோடரி கொண்டு தரிப்பதுபோலாகிறது. தரித்தும் பயனென்ன? மரம் விழுந்தாலும் வேருள்ள மட்டும் அது மேலும் மேலும் கிளைத்து முளைத்துக் கொண்டேயிருக்கும். ஆகையால் இளம்பிராயத்தில் சிறுவர்களைத் தேற்றுவது பின்னால் போலீஸும், நியாயஸ்தலங்களும், ஜெயில், கொட்டடிகளும் ஏற்படுத்தி அவர்களால் இராஜ்ஜியத்துக்குத் தீங்கு நேராதபடி காப்பதிலும் மேலான காரியமென்று ஸ்பஷ்டமாய் ஏற்படுகிறதல்லவா! மேற்றிசையில் இந்த உண்மையை புணர்ந்தவர்களில் முதன்மையானவர் ப்ரெடரிக் ப்ரோபல். இவர் "செத்தபின் சுடுகாடு சென்று சடங்குகள் செய்து ஒருவனைக் கரை யேற்றுவதிலும், பிறந்தவுடன் தொட்டிலையண்டி நின்று அக்குழந்தை தன்னுணர்வுண்டாகி வளர்ந்து தன்மயத்துவம் பெற வுழைப்பது மேல்" என்றுணர்ந்து அவருடைய வாழ்நாள் முழுவதையும் குழந்தைகளை வளர்க்கும் வழியைக் கண்டு பிடித்து அதன் முறையை விளக்குவதில் கழித்தார். அப்படியே பருவமேறுவேற மனிதனுக்கும் வரையில் அதை யனுசரித்துப் போதிக்கு முறை கண்டுபிடிக்கவேண்டு மென்பது இவர் கருத்து. ஆனால் இவருடைய வாழ்நாள் அதற்குப் போதவில்லை. இவர் அரைகுறையாக விட்டதை நமது ஆரிய ரிஷிகள் இவருக்கு முன்னேயே பூர்த்தி செய்துவைத்திருந்தார்கள். ஆனால் அம்முறைகள் அவர்களுடைய சந்ததியார்களின் ஆண்மைக் குறைவாலும் தாழ்மைநிலையாலும் எவ்வளவு பிரசித்தி பெற்று விளங்கவேண்டுமோ அவ்வளவு விளங்கவில்லை. விளங்கவில்லையானாலும் அவையழிந்துபோகவில்லை. ஏனெனில் அவையென்றைக்குமழியா உண்மைகள். உலகழிந்தாலும் உண்மை அழிவதில்லை. "பூமியும் ஸ்வர்க்கமுமழிந்தாலும் என்சொல்மட்டும் அழியாது." அதாவது மாறாது என்றார் யேசுகிறிஸ்து. இவர் மனிதனுடைய உண்மையை உள்ளபடி முற்றுமறிந்து போதித்திருந்தும் இவர்போதனை? புத்திவிர்த்தியினால் அகங்காரம் துளிர்த்த மேற்றிசையாருக்கு உள்ளத்திலுறைக்கவில்லை. தேகத்தை யொட்டி மனிதனைப் பாலன், சிறுவன், பெரியவன் என்று வகுத்தல் தகுதியல்ல. உள்ளத்தின் விர்த்திக்குத் தக்கபடியே அவன் மதிக்கப்படவேண்டும். உண்மையான முறைப்படி வளர்க்கப்பட்ட ஒருவன் உள்ளும் புறமும் ஒத்து விளங்குவான். அறிவென்பதே அனுபவம். ஆகையால் உலகானுபவத்துக் காதாரமாகவே யிருக்கவேண்டும் எல்லாப்போதனையும் படிப்பும். பள்ளியிற் போதனை வெளியனுபவத்தை விளங்கச்செய்வதாகவிருக்கவேண்டும். விளங்கச்செய்யுமளவுக்கே அது உண்மையான போதனையாகும். குழந்தை பிறந்தால் அது குடும்பத்துக்குள்ளிருந்து வளர்கிறது. அதன் உலகமெல்லாம அதற்கு குடும்பத்துக்குள்ளாகவே: அப்படி வரையறுத்துச் சுருங்கப்பெற்ற சுற்றுப்புற ஞானத்தால் அதன் ஆத்மபுத்தியும் சுருங்கிப் போகாமல், வெளியுலகத்தை வியந்தறிந்து

ஆத்மபுத்தி அகன்று வளர்ந்து உலகானுபவ முற்றி அதையுங்கடந்து "உலகெலாமுணர்ந் தோதற்கரியனை உண்மையனைக்" காணற்க ருகனைய் அவனுத்மா வரையற்று விளங்கவேண் டும். இதுதான் உண்மையானவித்தை. இதை யடையப்பெறுவதுதான் உயிர்நலம் பயக்கும். இதைக்கொண்டேமனிதன் இகம்பரம் இரண் டிலும்தேறிப்பிழைக்கவேண்டும்—இதை ஆத் மவித்தையென்று சொல்லுவர் நம்மில் மூத வினர். குழந்தைகளுக்கு சுபாவமாகவுள்ள ஆத்மபுத்தியும், அவர்களைப் பழக்கும் முறை தப்பாக விருத்தலால் வயதுசெல்லச் செல்ல விர்த்தியாய் பிரகாசிக்காது, ஒடுங்கிமழுங்கி இருந்தவிடம் தெரியாமற் போகிறது—இந்த உண்மையை உள்ளத்தில் வைத்துழைப்பதே உண்மையான வித்யாபோதன முறையாம்—இந்த உண்மையை உள்ளபடி கிரகித்தவராத லால் ப்ரோபல் கண்டுப்பிடித்த் கிண்டர்கார்ட ன்முறை வரவரப் பரவிவருகிறது. அவர் மு றைக்குயிராயுள்ளது இந்தவுண்மையே. இந்த உண்மையை யறிந்து பற்றினவர் அவர் முறை யை யெளிதிலுணர்வார். மற்றவர்கள் என்ன தான் ஏட்டுப்படிப்புப் படித்தவர்களானலும் அவர் முறையை உண்மையிலுணரார் உண ராரே.

C. V. S.

---

## HOMER'S ILIAD.

### ஹோமர் என்னும் கிரேக்க மகாகவிபாடிய

# இலியயுத்தம்.

**ஹோமர்** என்பவர் பூர்வீக கிரேக்க மஹா கவிகள் எல்லோரினும் சிறந்து சிரோ ரத்நம்போல விளங்கினவர். வடமொழியில் வால்மீகி முனிவரும், தென்மொழியிற் கம்ப நாடரும் போலச் சிறப்பு வாய்ந்தவர். ஐரோப்பியர்கள் இவருக்கு மேலான இதிஹாஸ மகா கவிகள் இல்லை யென்று இவரை வெகுவாக மெச்சிக்கொள்வார்கள். இப்புலவர் பெருமான் இயற்றியருளிய இணையிலாக் காவியங்கள் இரண்டு. அவ்விரண்டிலும் முதன்மையானது **இலிய யுத்தம்** என்னும் இக்காவியம். இவ்வரிய காவியம் ஐரோப்பிய பாஷைகள் பலவற் றினும் பற்பல பெரும்புலவர்களாலும் மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. இதனை எனது சிற் றறிவுக் கெட்டியவளவில் தமிழில் செய்யுளாக எழுதக் கருதினேன். செய்யுள் நடை எவ்வ ளவு தெளிவாக விருப்பினும் அதில் பழக்க முள்ளவர்களுக்கன்றி மற்றவர்களுக்குத் தெற் றெனப் பொருள் விளங்காதாதலின் ஒவ்வொரு செய்யுளுக்கும் பொழிப்புரையும் எழுதக் கருதினேன். இதனைப்படிப்போர்கள் இதனுள் நிறைந்துள்ள குற்றங்களைப் பாராட்டாமல் மறைந்துள்ள குணங்களைக் கிரகித்தல் வேண்டுமென்று அவர்களை மிகநயந்து கேட்டுக் கொள்ளுகின்றேன்.

இந்நூலை ஆதிபாஷையாகிய கிரீக்கினின்று மொழிபெயர்த்ததற்கு அப்பாஷை எனக்குச் சுத்தமாகத் தெரியாமையினாலும், அங்கிலேயபாஷையில் மொழி பெயர்த்துள்ள புலவர்கள் முதனூலை அவ்வளவு பொருள் பிறழாமல் ஒட்டிச் செல்லாமையினாலும், யானும் கதையை மாத்திரம் பற்றிக்கொண்டு மற்ற விஷயங்களில் நமது பாஷாரீத்திக்குத் தக்கபடிக் கூறியிருக்கின்றேன். உயர்திணைப்பெயர் அஃறிணைப் பெயர்களாகிய இடுகுறி காரணப் பெயர்களைத் தமிழ்ப் படுத்துங்கால் அவை செய்யுளில் எளிதில் அமையும்படி சிறிது மாற்றியிருக்கின்றேன். வடமொழியில் ராம:, க்ருஷ்ண: என்று முடியும் பெயர்களைத் தமிழில் இராமன் கிருட்டினன் என்று மாற்றியிருத்தல் போல் கிரீக்கு பாஷையில் 'ஸ்' என்று முடியும் பெயர்களை 'ன்' என்றும் 'க்ர' 'கரி' முதலானவற்றை, கர, கிரி முதலிய வாகவும், வேறும் கற்றோர்கள் பிழைகூறாரென்று கருதி மாற்றியிருக்கின்றேன். இவ்வரியதோர் பெரியநூலை நிர்விக்கினமாக நிறைவேற்றுவிக்கப் பரங்கருணைப் பெருங்கடலாகிய இறைவனையே நம்பித் தொடங்கியுள்ளேன். அவர் திருவருள் புரிவாராக.

இந்நூலின் விஷயம் பின்வருமாறு அதிசங்கிரகமாகச் சொலலப்படும்:— இது **தராய் (Troy)** என்னும் நகரின் முற்றுகையைப்பற்றி விவரிக்கும் ஓர்கதை. **ஸ்பார்டா (Sparta)** தேசத்துக்கதிபதியாகிய **மெனிலேயன் (Menelaos)** என்பவன் தராய் தேசாதிபதியாகிய ப்ரையம் (Priam) என்பவனுடைய மகனாகிய **பாரின் (Paris)** என்பவனை ஒருகாலத்தில் அதிதியாக வரித்து உபசரித்து வெகுமானித்தான். அத்தீயவன் பாம்புக்குப் பால்வார்த்தால் அது விஷத்தையேகொடுக்கும் என்பதுபோல தனக்குச்செய்த நன்றிக்குமாறாக அவ்வரசன் மனைவியாகிய **எலன் (Helen)** என்பவளை அபகரித்துக் கொண்டு ஓடிப்போய்விட்டான். அதனால் மெனிலேயன், தனக்குச்செய்த துரோகத்துக்காகப்பழிவாங்கும் பொருட்டுத் **தராய்** நகரை முற்றுகை செய்யும்படி கிரேக்கர்களுக்குப் போதனைசெய்து அவர்களோடும் சென்று முற்றுகையிட்டான். அம்முற்றுகை பத்துவருட காலம் நடந்தது. **இலியயுத்தம்** என்னும் இக்காப்பியத்தில் பத்தாம் வருடம் முதல் நடந்தவிருத்தாந்தங்கள் மாத்திரமே கூறப்படுகின்றன. துணைவர்களாகத் தொடர்ந்து வந்த பற்பலகிரேக்க சேனைகளுக்கும் மகாசேனாபதியாயிருந்த அகமம்னனுக்கும், மகாவீரனாகிய அக்கிலனுக்கும் (Achilles) உண்டான வாக்குவாதமும் பிணக்கமும் தொட்டுத் தொடங்குகின்றது. அந்தப்பிணக்கத்தால் அவ்வக்கிலன் கோபங்கொண்டு சைனியத்தைத் துறந்து போய்விடுகின்றான். அதனால் அதுவரையில் அபஜயப்பட்டுவந்த தராய் நகரத்தார் வெற்றி கொள்ளுகின்றார்கள். பின்பு அக்கிலன் சிறிது சாந்தமாகித்தன் சிநேகிதனாகிய பத்திரக்களன் (Patroclos) என்பவனை அப்பகைவரோடு எதிர்த்துப்போர் செய்யும்படி அனுப்புகின்றான். அவனும் சென்றுபோரில் மாள்கின்றான். அதனால் அக்கிலன் பெருங்கோபங்கொண்டு யுத்தபூமிக்கு விரைந்தோடிப்பகைவர் சேனாபதியாகிய எத்தர் (Hector) என்பவனைக் கொல்லுகின்றான். இக்காவியம் எத்தரின் சமரக்கிரியைகளோடு முடிகின்றது. இக்கதையைப் புலவர் பெருமான் பதினேழாயிரம் பாடல்களால் விவரித்திருக்கிறார்.

விநாயகர் துதி.

எவனருள் வலத்தால் யார்க்கு மியன்று செய் கருமமெல்லாம்
அவமறவினிதின் முற்றுமன்னவன் பாதமென்பூ
நவமுறத் தொடங்குமிந்நூனவையற முடியுமாறு
உவகையின் முடியிற்சூடி யுள்ளிடையிருத்துவாமே.

அவையடக்கம்.

சிற்றில் கட்டிக்களிக்குஞ் சிறுவனோர்
பெற்றிசேர் பெருமாளிகை யாக்குதற்
குற்ற பான்மையிஃதோதத் துணிந்தது
கற்றுளார் நகல் காரணமாகுமே.

## ஹோமர் என்னும் கிரேக்க மகாகவிபாடிய இலியயுத்தம்.

---

பாயிரம்.

1. கலையெலாந் தெரிக்கு மாதே கழறுக வெனது நாவின்
தலையிருந்தமுத மென்னச் சுவைமலி தருதீம் பாவால்
அலகறு துயர்கிரேக்க ரடைதலுக் கேது வான
உலைவறு வீர னக்கிலன்சின முவப்பி னீங்கே.

(இ-ள்) கலைஞானங்கள் எல்லாவற்றையும் வேண்டுவோர்களுக்கு உபதேசித்தருள் கின்ற அணங்கே, நீயென் நாவின்கண் வீற்றிருந்து கிரேக்கர்களுக்கு யுத்தத்துக்குச் சென்ற காலையில் எண்ணிறந்த துன்பங்கள் உண்டாதற்குக் காரணமாகிய அக்கிலன் (Achilles) என்னும் மகாவீரன் கோபத்தை விவரித்து அமுதம்போலச் சுவைமிகுந்த இனியபாடல்களாற் சொல்லியருள்வாயாக.

2. விதித்தநாள் நிரம்பு முன்னர் வீரர்வெங் களத்து நாயும்
கொதித்தெழும் பசியா றாற்ற கழுகின்வெங் குழுவு மன்னோர்
கதித்திடு முடலங் கீண்டு காதலின் விழுங்க வாவி
குதித்தெம னூரிற் செல்லக் கூட்டுமம் முனிவைக் கூறாய்.

(இ-ள்.) தமக்குக் கடவுளால் நிர்ணயிக்கப்பட்ட ஆயுள் இன்னம் பூர்த்தியாகு முன்னேதானே, கொடிய போர்க்களத்தில் தமது உடலை நாயும் கழுகும் கிழித்துக் கொத்தி யுண்டு பசியாற்றிக் கொள்ள, எண்ணிறந்த வீரர்களுயிரைக் காலனூருக் கேற்றுதற்குக் காரணமாகிய அவ்வக்கிலன் கோபத்தை விவரித்துக் கூறல் வேண்டும்.

3. தெரிதாக்கிளத்துவா யக்கிலனும் வெகுதிமை யாற்றும்
உரிமை கொள்வேந்தனு மத்திரிதனு முருத்தலாலே
பெருவரும் யோவினுள்ள மிருந்தவா போரிற் சாய்ந்தாங்
கரிய வெந்திறலார் வீரரா ருயிரிழந்த தன்றே.

(இ-ள்) மகாவீரனுகிய அக்கிலனும் அவனுக்குக் கொடிய குற்றங்களைச் செய்த ராஜாதி ராஜனுகிய அத்திரிதனும் (Atredes) ஒருவரோடொருவர் கோபித்தலாலே, ஒப்பில்லாத முதற் கடவுளாகிய யோவின் (Jove) திருவுள்ளப்படியே யுத்தத்தில் அநேக வீரர்கள் தமது ஆவியையிழந்த விருத்தாந்தத்தை உலகிலுள்ளோர் உணரும்படிச் சொல்லியருளல் வேண்டும்.

எஸ். முத்து ஐயர், பி.ஏ.

---

## சுகுணசுந்தரம்.

### VIII.

ஹேமாபுரி பட்டணத்தில் சுலோசனையின் கலியாணத்திற்காக பறைசாற்றும் ஒலிகேட்ட மைந்தரு மகளிரும் மேக முழக்கத்தைக் கேட்ட மயில்கள் போல குதூகலத்துடன் தங்கடங்கள் வீடுகளில் நடக்கின்ற கலியாணத்தைப்போல ஆசையுடன் நகரத்தையும், மாளிகைகளையும் அலங்கரிக்கப் புகுந்தார்கள். தெருக்களி னிரண்டுபக்கங்களிலும் உள்ள சுவர்களும் திண்ணைகளும் சுண்ணச் சாந்துபூசி பலவகைப்பட்ட சித்திரங்களால் அலங்கரிக்கப்பட்டன; வாசல்களில் புஷ்பங்களாலும், நவமணிகளாலும் அமைக்கப்பட்ட மாலைகள் தொங்கிக்கொண்டிருக்கிற முத்துப் பந்தல்களில் வாழை, கமுகு முதலிய மரங்களாலும், பலவர்க்கங்களாலும் அலங்கரிக்கப்பட்டன; இடைக்கிடை முத்து மாலைகளும், பலவித வண்ணமுள்ள துகில்களும் தொங்கும்படி கட்டப்பட்டிருக்கிற பச்சிலைத் தோரணங்கள், ஆகாயத்தை யளாவும்படி கட்டப்பட்டன; மகளிர்கள் தங்கள் தங்கள் வீடுகளை மெழுக்கினுலும் கோலங்களாலும் அலங்கரித்துத் தாங்களும் வஸ்திராபரண பூஷிதர்களாய் சித்திரப் பதுமைகட்கும் தங்கட்கும் வேற்றுமை தோன்றும்படி இங்குமங்கும் உலாவுவார்கள்; மைந்தர்கள் தத்தம் கிரகங்கட்கு வருகின்ற அதிதிகள், பந்துக்கள் முதலியவர்களை அறுசுவை யுண்டியாதிகளால் உபசரித்து இன்னும் வருபவர்களுண்டோவென்று தெருக்களில் போகின்றவர்களை போஜனத்திற்கு வழிமறித்தழைப்பார்கள்; சில பெண்கள் மேன்மாடிகளிலுள்ள பலகணியின் வழியாய் சந்திரோதயம்போல் விளங்குகின்ற முகத்தைக் காட்டிக்கொண்டு சுலோசனையின் கலியாணத்திற்கு வருகின்ற அன்னியதேயத்து அரசகுமாரர்களாகிய சகோரங்கள் கண்டு களிக்கும்படி பந்துமுதலியன விளையாடுவார்கள். தெருக்கள்தோறும் சதுரங்க சைன்னியங்களுடன் வருகின்ற அரசர்களின் நெருக்கத்தால் இடைவெளி காணப்படாமலிருந்தன. அவ்வரசர்களை நான்கு கோட்டைவாயில் முகப்பிலும் அமைச்சர்கள் எதிர்கொண்டழைத்து, இராஜ கிரகத்திலுள்ள சர்வ சாமக்கிரியைகளால் நிறைந்த விடுதிகளில் சேர்ப்பித்தார். தேவாலயங்களில் நைமித்திகங்களை விசேஷமாய் நடத்தினர்கள். உப்பரிகைகளில் மங்கையர்கள் பாடுகின்ற மங்கள வாழ்த்தொலியைக் கூந்தலிலணிந்த மலர்மாலைகளில் மொய்க்கின்ற வண்டுகளினிசைகளடக்கின.

"கொண்டேகுந்தன் மேள கொள்கைபோற் பேசுமுகில்
உண்டோவிலையோவென் றெட்டக மண் ணுந்துவா."

என்றபடி, ஒட்டகங்கள் யானைகள் குதிரைகளின் மீது ஏற்றப்பட்டு அடித்துவருகிற முரசுமுதலிய வாத்தியங்களின் முழக்கங்கள் திக்குகளெங்கும் வியாபித்து, தேவர்களையும், திக்பாலகர்களையும், விவா

நத்திற்கழைக்கப் புகுவல்போல சென்றன; யானைகளும், குதிரைகளும் அரச குமாரர்களும் சஞ்சரிக்கின்ற தெருக்கள், மத ஜலத்தினாலும், வாயி நீரினாலும், சந்தனக் கலவைகளினாலும், நதிகள் போற்காணப்பட்டன; அவற்றில் ஓடுகின்ற இரதங்கள் படவுகள் போன்றிருந்தன. வீடுகள்தோறும் எழுதப்பட்டிருக்கின்ற சித்திரத்திலுள்ள சுலோசனையை அரசகுமாரர்கள் கண்ணுற்று இப்பெண்மணி நம்மில் யாருக்குக் கிடைக்க சுகிர்தஞ்செய்திருக்கின்றோமோ என்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்வார்கள். இன்னும் முகூர்த்தகாலம் வருவதற்கு எத்தனை நாழிகை யிருக்கின்றன என வினவ, நான்கு நாழிகை உளதெனக் கூறுவார்கள்; இவ்வண்ணமாய் அளவிடற்கரிய விநோதத்துடன் கூடிய இந்நகர வாஸிகள் முதலினோர் கலியாண வைபவத்தைக் காணுமாறு சுறுசுறுப்பாய் அவா மேற்கொண்டு திரிந்தவர்களாயிருந்தார்கள்.

இஃதிங்ஙனமிருக்க, சாருதத்த மகாராஜன் தனதரண்மனையை நவமணிகளாலும், புஷ்பங்களாலும், தீபம், பூர்ணகும்பம் கண்ணாடி, யுக்மசாமர முதலிய அஷ்டமங்கலங்களாலும், இளநீர்க்குலை, பழக்குலைகள் முதலியவைகளால் பந்தல்களலங்கரித்து திருமண மண்டபத்தை இந்திரசபையும் அழகு குன்றும்படி சுவர்ணத் தகடுகளாலிணைக்கி, இரத்ந ஸ்தம்பங்கள் நாட்டி, கமகமவென்று பரிமளிக்கின்ற நறுமலர் மாலைகளாலும், பொம்மை விளக்குகளாலும் அலங்கரித்து சுற்றுப்பக்கங்களில் அரசகுமாரர்களும், அந்தணர்களும், முனிவர்களும் வீற்றிருக்குமாறு நவமணிகளாலிழைத்த பொற்பீடங்களைப் போடுவித்து மத்தியில் திருமணவினைக்குரிய வேதிகையில் ஆஸநங்களும், ஹோம திரவியங்களும் அமைத்து இளஞ்சூரியனைப் போல் ஒளி வீசுகின்ற பட்டுவிதானங்களால் இந்திரவியாநம்போலலங்கரித்து விவாகத்திற்குரிய காரியங்களை யத்தனிப்பதற்கு எல்லாத் தேயத்தரசர்களும் வந்துவிட்டார்களாவென்று விசாரிக்கும்பொருட்டு, கொலுமண்டபத்திற்குவந்து வீற்றிருக்குஞ் சமயத்தில், மதிவிலாஸன் அத்தருணத்தில் வந்து அரசனுக்கு வந்தனஞ்செய்து, "ஹே இராஜ சேகரா! தங்களாக்கினைப்படி நமது பட்டணம் இந்திரன் முதலிய தேவர்களுங்கண்டு அதிசயிக்கும்படி மிகவும் ரமணீயமாய் அலங்கரித்தாயிற்று. எல்லாத்தேசத்தரசர்களும் அவரவர்கள் சேனைகளுடன் நமது நகரம் இடஞ்சிறிது என்னும்படி நெருக்குற்றிருக்கின்றார்கள்; அவ்விராசர்களை எதிர்கொண்டழைத்து ஒவ்வொரு வருக்கும் தகுதியான விடுதிகளில் சேர்ப்பிவித்தேன்; இன்னுஞ் சுசீலசக்கிரவர்த்தியும் அவர் புதல்வர் சுந்தரமகாராஜனும், இரத்நபுரிக்கதிபனாகிய காமபாலனென்னுமரசனும் வந்துற்றிலர். புரோகிதர் முதலிய சகலமான பிராமணர்களும் நமது அரண்மனைவாயிலில் நிரம்பி யிருக்கின்றனர்; முகூர்த்தகாலஞ்சமீபித்து விட்டதென்றும் இப்பொழுதே சடங்குகட்கு ஆரம்பிவித்தால் சரியாயிருக்குமென்றும் சமூகத்தில் தெரிவிக்குமாறு நமதுபுரோகிதர் விசுவரூபர் நியமனஞ்செய்தமையால் இவண் விண்ணப்பஞ்செய்துகொள்ளலாயினேன்," எனக்கேட்டு மந்திரியைநோக்கி, "முகூர்த்தகாலமோ சமீபித்துவிட்டது; சுந்தரராஜனோவந்திலன்; நமது திருமணப்பத்திரிகை வரப்பெற்ற மற்றய அரசர்கள் யாவரும் வந்திருப்பதால், நாம் உத்தேசித்தவண்ணம் சுவயம்வரம் நடத்தப்புகுந்தால் நமது சுலோசனைக்கு விரதபங்கம் உண்டாம்; வேறு முகூர்த்தத்தில் மணவினை செய்யலாமெனின் இவண் வந்திருக்கும் அரசர்கள், இவன் நமக்கு எழுதியதொன்று செய்வதொன்றாகயிருத்தலால் இவனோடு போர்புரிந்து வென்று சுலோசனையைக்கவர்ந்து செல்வோமென எண்ணிக் கலகத்திற்கு யத்தனிப்பார்கள். அருமருந்தன்ன ஒரு பெண்ணைப் பெற்றயான் இந்தக்கஷ்டத்திற்குப் பாத்திரனாகும்படி கொடிய பாவம் என்ன செய்தேனோ?" என்றுகிலேசித்திருக்குமளவில் ஓர் தூதுவன் வந்து தண்டஞ்சமர்ப்பித்தெழுந்துநின்று, "தான் மாயாபுரிக்குச்சென்றது முதல் கிருபாகடாக்ஷ முநிவராச்ரமத்தினின்றும் சுசீலசக்ரவர்த்தி முதலினோர் புறப்பட்டு இந்நகரத்துக் கணித்தாய் வருகிற வரையிலுள்ள சங்கதிகளைச் சொல்லக்கேட்டு, மிகவுமகிழ்ந்து அன்னோரை எதிர்கொண்டழைத்து வருமாறு மந்திரிகட்குக் கட்டளையிட்டு அரசர்களையும் பிராமணர்களையும் அழைத்துக்கொண்டு கலியாணமண்டபம் வந்து சேர்ந்து அவர்கள் தத்தமக்கியன்ற ஆசனங்களில் வீற்றிருக்கும்படி தானும் ஓர் திவ்வியாஸனத்தில் வீற்றிருந்தான்.

அத்தருணத்தில் கிருபாகடாக்ஷ மாமுனிவரும் சுசீலசக்ரவர்த்தி முதலினோரும் குடை கொடி முதலிய பிருதுகளுடன் சைந்யங்கள் சூழ திக்குகளும் செவிடுபடும்படியான சகலவாத்தியமுழக்கத்துடன் அரண்மனைவாயிலில் தங்கள் தங்கள் இரதங்களினின்றுமிழிந்து விவாகமண்டபத்தில் பிரவேசித்தார்கள்.

அதுகண்ட சாருதத்தன் எல்லா அரசர்களுடன் சிம்மாஸனம் விட்டெழுந்து சென்று, முனிவனையும் சக்ரவர்த்தியையும் நமஸ்கரித்து அஞ்சலியஸ்தனாய் நல்வரவு கூறி சுந்தரன் சுகுணன் முதலினோரையும் தழுவிப் பொற்பீடத்தின்கண் ணெழுந்தருளுவித்து அவர்கள் அனுமதியால் தானுமோர் பீடத்தில் வீற்றிருந்தனன்.

அவ்வேளையில் சாருமதி, சம்பகாவதி, சித்திராங்கி முதலிய மங்கையர்கள் அந்தப்புறத்தையடைந்து மனோரமை நன்குமதித்து உபசரிக்கும்படி தங்களுக்காகக் கொடுக்கப்பட்ட மாளிகைகளில் தங்கியிருந்தார்கள்.

இங்ஙனங் கல்யாணமண்டபத்தில் கடககுண்டல ஹாரகேயூர மகுடமுதலிய திவ்வியாபரணங்களினால் அலங்கிருதர்களாய் காந்தியை வீசிக்கொண்டிருக்கின்ற இரண்டு இளஞ் சூரியர்கள் போன்று விளங்குகின்ற சுந்தரசுகுணர்களைக்கண்ட அரசகுமாரர்கள் அவ்விருவர்களில் சுந்தரனதுபுன்னகையோடு விளங்குகின்ற முககமலத்தையும், மேருமலையைப்போல் பருத்துயர்ந்த இரண்டு புயங்களையும், அம்மலையினின்று மிறங்கியோடுகின்ற அருவிகளைப்போல் வெண்பட்டுத்தரீயம் தாழ்ந்துகிடக்கின்ற அழகியமார்பு திருமகளுக்கு நர்த்தனச் சபைபோல் தோன்றுவதையும், கண்டு வியந்து இவனது உருவத்தைக் கண்ட நமதுமனது இவனோடுசிநேகித்துச் சல்லாபமாயிருக்கக் கருதிச்செல்கின்றமையால் இந்திராணிமுதலிய தேவஸ்திரீகளும் இவனைக் கண்ட தக்ஷணம் மோகிப்பார்களென்பதில் சந்தேகமில்லை. ஆகையால் சுலோசனை அவளழகுக்கிசைந்த இவனுக்கன்றி நமக்கப்பெண்மணி கிடைப்பது துர்லபந்தான்;" என்று மேக்கத்துடன், கடைக்கண்களால் அச்சுந்தரனை அடிக்கடி பார்த்தும், பாராதவர்களைப் போல் இறுமாப்புடனிருந்தார்கள்.

பின்னர் சாருதத்த மகாராஜன் சிம்மாசனத்தினின்றெழுந்து நின்று சொல்வானாயினன்.

"ஓய் இராஜகுமாரர்காள்! உங்களுக்கு யான் தெரிவித்துக் கொள்ளும் விண்ணப்பம் ஒன்றுளது. அஃதென்னையெனின் எனதருமைப் புதல்வியாகிய சுலோசனைக்கு சுயம்வரப்பத்திரிகை எல்லாதேயத்தரசர்களுக்கும் அனுப்பி யிருப்பதை யுணர்ந்த மங்கை நேற்றுக்காலையில் சிங்காரத் தோட்டத்தில் தனதிஷ்டதேவதையாகிய லோகமாதாவை யருச்சித்துத் துதிபுரிந்து சகலகலைகளில் வல்லவனும், சக்ரவர்த்தியுமான ஓர்கொழுநனை யான் மணம் புரியத்தந்தருளுமாறு இதுகாறும் பிரார்த்தித்துவந்தும் அருள் புரிந்திலையாதலின் பங்கேருகத்தைப் பழிக்கும் நின்சிற்றடிகளில் என்னைச் சேர்த்தருள்வாயாக வென்று உயிர்துறக்கப் போந்தருவாயில், அம்பாள், அம்மாது கனவிற் றோன்றி யருளிய வண்ணம் சுசீலசக்ரவர்த்தியின் குமாரனாகிய இச்சுந்தரமகாராஜன் முதலில் தன் கண்களுக்குப் புலப்பட்டுத் தோன்றிக் காத்தருளினமையால் தனக்கிசைந்தகணவனாக இம்மகானுபாவனை சுவயமாக வரித்துக் கொண்டிருப்பதுதான்" என்று சொல்லி சிம்மாசனத்தில் வீற்றிருந்தான்.

இவ்வசனங்களைக் கேட்டவரசர்கள் மிக அதிசயித்து, நாம் கருதியது சரியாய்முடிந்ததுபோலுமிருக்கிறதென்று தங்களுக்குள் வியந்து கொண்டிருக்கும் பொழுது அவ்வரசர்களைப்பார்த்து, கிருபாகடாக்ஷ மகாமுனிவர், "கேளுங்கள், மண்டலாதிபர்களே! இந்தசுலோசனையின் சரித்திரத்திற்குச் சாட்சியாக இன்னொரு விசித்திரமிருக்கின்றது. அதாவது இக்காமபால ராஜகுமாரியாகிய சண்பகாவதியை ஊழ்வினைப்படி துர்முகனென்னுமரக்கன் எடுத்துக் கொண்டுபோய் பிலத்வாரத்துக்குள்ளிருந்த தனது கோட்டையில் காவலாக வைத்திருந்தான். அந்நாளில் இக்கன்னிகை ஓர்வித தந்திரமாய் அவ்வரக்கன் அனுமதியின்படி அந்நகரத்துக் காளி கோயிலையடைந்து அகோரதவம் புரிந்தாள். அத்தவத்திற்கு மெச்சியதேவி அவள் கருதியவண்ணம் துர்முகனை

யூழிக்கவும் ஓர் சத்புருஷனை அவன்பால் சேர்ப்பிக்கவும் கருதி சுலோசனையின் உத்யானவனத்திலிருந்த் சுகுணசுந்தரர்களுக்கு மாலேயும் செண்டுமோக விழ, அதனையேற்ற அவர்கள் செண்டில் வைக்கப்பட்டிருந்த பொற் சுருளால் இவ்வரலாற்றை யுணர்ந்து உடனே அவண் சென்று துர்முகனைக் கொன்று சண்பகாவதியும் அவள் கோரிக்கையின்படி சுகுணனால் அங்கீகரிக்கப்பட்டு இச்சங்கதிகளே இக்காமபாலனுக்கு கிங்கரனுற்றெரிவித்து எல்லாருமாய் இதே காலத்தில் சுகுணனுக்குச் சம்பகாவதியைத் திருமணஞ்செய்விக்க உத்தேசித்து வந்திருக்கின்றார்கள். ஆகையால் இச்சுகுணனைப்பற்றிய விஷயங்கள் காமபாலனுக்கும் சம்பகாவதிக்கும் தெரிந்திலவாயினும் கடவுளின் அமைப்பின்படி தம்பதிகளாக சேர்க்கப்பட்டிருக்கின்றார்கள். அதுபோலவே சுந்தரனுக்கும் சுலோசனைக்கும் மணம்புரிவிக்கக் கடவுள் எண்ணியிருந்தால் யார் என்ன செய்யலாம்." என்றார்.

(இன்னும்வரும்.)

டி. எஸ். சுப்பராமையர்.

---

REVIEWS.

## நமதுபார்வைக்குவந்த புஸ்தகங்கள்.

### 1. காந்திமதி.

இது "விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள்" என்னும் தலைப்பின் கீழ் சென்னை அறிவைப் பரவச் செய்யும் ஏஜன்ஸியார் வெளியிட்டுவரும் உத்தம கிரந்தங்களில் கடைசியாய் வெளியான ஓர் அற்புதமான நவபவக்கதை. இது இங்கிலீஷில் இவ்விதக்கதைகள் சொல்வதில் மகாவிற்பன்னராக விளங்கிய ஸர் வால்டர் ஸ்காட் என்னும் கதாசிரேஷ்டர் "டாலிஸ்மான்" என்னும் பெயராலியற்றிய கதையின் உட்கருத்தை மேற்கொண்டு இந்தியாவில் இந்திய சரித்திரத்திற்குப் பொருந்த அமைத்து அதிசாதுர்யமாய் கே. வி. சுப்பய்யா ஐயர் அவர்களாலியற்றப் பட்டது. இது விவேகசிந்தாமணியிலிருந்தெடுத்துப் பதிப்பிக்கப் பட்டதால் இக்கதையை விவேகசிந்தாமணியை யொழுங்காய் வாங்கி வாசித்து வருவோர் நன்றாயறிவார்கள். அறியாதவர்களுக்கு இக்கதையின் நீதிசாரத்தைச் சுருக்கமாய்ச் சொல்லி விளங்கவைப்போம். விஜயநகர் மகாராஜ்யம் உந்நதபதவியிலிருந்து தென்னிந்தியாவுக்கெல்லாம் தலைமை பூண்டராஜ்ஜியமாக விளங்குகையில் ஆக்பர் சக்ரவர்த்தி அதன்மீது படையெடுத்து வந்து போருக்குச் சித்தமாய்ப் பாளயமிறங்கியிருக்கிறார். விஜயநகர் மகாராஜா கிஷ்ணராயர் தம்முடைய சிற்றரசர்கள் சேனைகளோடு அவரை யெதிர்த்துப் போர் செய்யத் தயாராய் போர்க்களம் வந்து சேர்ந்து விட்டார். சோழராஜனைத் தவிர மற்றத் தென்னிந்தியா சிற்றரசர்களெல்லாம் விஜயநகருக்குக் கப்பங்கட்டு மரசர்களாதலால் போர்க் கோலம் கொண்டு விஜயநகர் வந்து சண்டைக்கு முஸ்திப்பாகப்பாளயமிறங்கியிருந்தார்கள். சோழதேசத்தரசனுடைய ஏகபுத்திரனும் சுத்தவீரனுமாகிய இளவல் போர் முகத்துத் தன் வல்லமையைக் காட்டிப் பிரதாபம் பெற நினைத்துக் கோலமாறி தான் இராஜகுமார னென்பதைத் தெரிவிக்காமல் சாதாரணமான படைவீரன் போல் சென்று கிஷ்ணராயர் சேவகத்திற் புகுந்து தன்னுடைய புத்தியுத்தி சாமர்த்தியத்தாலும் யுத்தத்திற்காட்டிய வீரத்தன்மையாலும் பேரும் புகழும் பெற்றதன்றி கிஷ்ணராயரால் மெச்சிக்கொண்டாடப் பெற்று அவருடைய சைனியத்தில் முக்கியமான தளபதி யந்தஸ்தும் பெற்று அவருடையமனதுக் குகந்தவனும் அவர் நம்பிக்கைக்கு தகுந்த பாத்திரனுமாய் விளங்கினன். இப்படியிருக்கையில் கிஷ்ணராயருக்கு திடீரென்று சுரம்வந்து பிழைக்கரியஸ்திதியிலிருந்தமையால் மஹாவீரனும் சுத்தஹிருதயனுமாகிய ஆக்பர் அவரைத்திடீரென்று பீடித்தபிணி நீங்குமட்டும் சமாதானமாயிருக்க உடன்பட்டான். அப்பொழுது கிஷ்ணராயரின் குலகுருவாகிய மகரிஷியாச்ரமத்தில் அவருடைய பூஜைகாலத்தில் தீபாராதனை தரிசனம் செய்து பிரசாதம் வாங்கிச் செல்ல மஹாராணியும் அவள் குமாரத்தியாகிய காந்திமதியும் வர, அம்மகரிஷியின் கருணைக்குப் பாத்திரனான போர்வீரன் அவருடைய ஆச்ரமத்திலுள்ள வில்வ மரத்தடியில் நிஷ்டையிலிருந்தான். அப்பொழுது அவன் காந்திமதியைக்காண, காந்திமதியும் அவனைக்காண இருவர் நயனங்களும்

சந்தித்தன. அவர்களிருவர் கண்களும் கண்டு கலந்ததில், அவர்கள் கருத்தும் கலந்து, மனோலயப்பட்டுக் காதல் பிறந்தது. உண்மையான காதலின் வன்மையை உரைக்க யாராலாகும். அதுவரம்பிலா வன்மையுடையது. சூதிலாச் சூக்ஷ்மமுடையது. எதையும் வெல்லும். எதையும் பொறுக்கும். அன்பிற்கன்பே யீடன்றி வேறெதுவு மீடாகாதல்லவா! தேகம், மனம், உயிர், உலகம் எல்லாம் உண்மையன்பின் அனுபவத்திற்காக உண்டான கருவிகரணங்களேயன்றி இவைகளால் அதற்கு வேறு பிரயோசனமில்லை. இப்பொய்யுலகம் உள்ளன்பின் உண்மையுணராதுபேறென்றும் புகழென்றும் கீர்த்தியென்றும் நாமரூபகர்மாதி பேதங்களாலுண்டாகும் வேற்றுமைகளைச் சதமென்று நம்பி அன்பின் வழியறியாது அதற்கு மாறாய் நடப்பதே வழக்கமாயனுசரித்து வருகிறது. அன்பின்வழி சத்தியவழியென்றும் அன்பின் நிறைவே எங்கும் பரிபூரணமான சத்தியநித்தியப் பொருளென்றும் மாயைவசப்பட்ட மானிடர் அறிகிலார்; ஆகையால் அவர்கள் எப்பொழுதும் உண்மையான அன்புக்கு உள்ளபடியிடரே விளைத்து வருவார். ஆனால் அவர்கள் இடர் விளைப்பதாகத் தொடர்ந்து செய்வதெல்லாம் அக்னியில் ஆகுதி செய்தவிக்க யத்தனிப்பது போல் அன்பை யடக்குவதற்கு பதிலாக அதை வளர்ப்பதாயிருக்கிற தென்னு முண்மையை அவர் உணர்கிலார். ஆகையால் உள்ளன்புக்கு எப்போது மிப்பொய்யுலகில் இடர் மிகுதியேயாயினும் கடைசியில் அது தன்வலியினால் ஜயிப்பதுமட்டும் நிச்சயம். அப்படி இவ்விருவர்க்கு முண்டான உண்மைக் காதலைத்தடுக்க என்னென்னவோ பிரம்மப்பிரயத்தனங்கள் செய்தும் எல்லாம் மேலுக்குப் பங்கம் விளைப்பதுபோல் தோன்றி உண்மையில் உள்ளன்பின் வன்மையை விளங்கச் செய்வதாகவே முடிந்தன. உள்ளன்பின் சக்தியையும் உண்மையின் மகிமையையும் உள்ளபடியுணர விரும்புவோர் இக்கதையின் முதலதிகாரத்தில் முளைத்த இவ்வதிசய அன்பு வரவரவளர்ந்து எத்தனையோ வில்லங்கங்களை வென்று இரும்பைப்பொன்னாக்கும் பரிசவேதியைப் போல் அதைத் தொடர்ந்துற்ற இடர்களை யெல்லாம் அதன் கருத்தை நிறைவேற்றிக் கொள்ள வழிகாட்டும் சுடர் விளக்குகளாக மாற்றிக் கடைசியில் அசத்தியமும் அக்கிரமமும் "தன்வினை தன்னைச்சுடு" மென்ற மூதுரைப்படி அகஸ்மாத்தாக நேர்ந்த சம்பவங்களால் அடியோடு அழிந்துபோக, அன்பும் சத்தியமும் அதற்குற்ற துன்பங்களையெல்லாம் பொறுத்துவென்று; புடம் போட்டதங்கம் அக்னியினின்றும் பொன்னாய் வெளிவந்து உலையில் காய்ச்சி சுத்தியாலடித்ததெல்லாம் அதிலுள்ள கலவைகளைமட்டு மொழிக்க சாதனமாகிக் கடைசியில் பழுக்கக் காய்ச்சிய பொன்னை பத்தரைமாத்துப் பழுதிலாத்தங்கமாக விளங்கவைப்பதுபோல: இவர்கள் அன்பும் குமாரனுக்கும், குமரிக்கும் காமவேட்கையாலுண்டான சிற்றின்பமளிப்பதாகமட்டுமின்றி "ப்ரக்ஞானம் பிரம்மம்" என்று சொல்லிய மகாவாக்கியத்திற் கிலக்ஷியமான பிரம்மானந்தம் விளைக்கும் பேரன்பாகமாறி விளங்கலாயிற்று. இப்படி அதியற்புதமாய் வளர்ந்து முதிர்ந்த இவ்வன்பின் சரிதையை சாங்கோபங்கமாயுணர விரும்புவோர் இப்புஸ்தகத்தை வாங்கி அடிமுதல் முடிவுவரையில் வாசித்துக் கடையதிகாரத்தில் கண்ட "அதிசயத்தின் மேல் அதிசயம்" விளைந்ததையுணர்ந்து அதிசயித்து எல்லாம் "ஸர்வமங்கள சம்பூரணம்" ஆகவே முடிந்தது கதையின் விசேஷம் என்றுமட்டு முன்னாமல் உண்மை விதியை உள்ளபடி யெடுத்து தகரிப்ப தாயிருப்பதால் அதுவே இக்கதையின் சிறப்புமாமென்று நம்மோடு ஒருமனப்பட்டுகப்பார்களென்பது நிச்சயம். நம்வார்த்தையை நம்பி இப்புஸ்தகத்தை வாங்கி வாசிப்போர் அடிமுதல்கடைவரையில் அதிரசமான இன்பம் பயக்கும், தெவிட்டாத் தெள்ளமுதுக் கொப்பான கதாமிர்தபானம் செய்வார்கள். ஒவ்வொரு பக்கத்தின் தலைப்பெயரும் போகப் போகப் படிப்பவர் மனதை வசீகரப்படுத்துமியல்புடையதாயிருக்கும்.

## 2. திருவாவடுதுறைக் கோவை.

இது திருவாவடுதுறை யாதீனத்துத் தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவரியற்றியது. ஷெ ஆதீனகர்த்தர் விருப்பத்தின்படி கும்பகோணம் காலேஜ் தமிழ்ப்பண்டிதராகிய உத்தமதானபுரம் பிரம்மஸ்ரீ

வே. சாமிநாதையரவர்களால் பலபிரதி ரூபங்களைக் கொண்டு பரிசோதித்து, முகவுரை நூலாசிரியர் வரலாறு, நூலாராய்ச்சி, அரும்பதவுரை முதலிய விசேஷ அமைப்புகளோடு வைஜயந்தி அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது. இப்புத்தகத்தையும் இதை ஆராய்ந்துபதிப்பித்தவர்சிறப்பையும், இந்நூலாசிரியர் மேன்மையையும், முன்னிவ்வாதீனமிருந்த மேன்மையையும் இப்பொழுது அதிருக்கும் தாழ்மையையும் உள்ளாயுங்கால் நம்மனத்தில் பலவிதமான எண்ணங்களுதித்து மறைந்து, சொல்லொணாச்சுற்றுச்சுழற்சி யுண்டுபண்ணுகிறது. இப்புத்தகத்தின் பதிப்பாசிரியர் எழுதியிருக்கும் முகவுரையில் இந்நூலைப் பற்றிப் பின்வருமாறு எழுதியிருக்கிறார்:— "கோவை யென்பது, தமிழ்ப்பாஷைக்குரிய தொண்ணூற்றியாறு வகைப்பிரபந்தங்களுள் ஒன்று: காட்சி முதலிய துறைகள் முறையே கோக்கப்பட்ட நூலென்பது இம்மொழியின் பொருள்; இஃது ஐந்திலக்கணங்களுள் பொருளின் பகுதியாகிய அகப்பொருளிலக்கணத்திற்கு இலக்கியமாக அமைந்துள்ளது; குறிஞ்சித்திணை முதலிய ஐந்திற்கும் உரியனவாக முன்னோர்கள் விதித்தமுதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள்கள் முகமாகத் தலைவன் தலைவிகளுடைய ஒழுக்கங்களை, உலகவழக்கம், செய்யுள் வழக்கமென்னுமிரண்டிற்கும் ஒப்ப நன்கு தெரிவிப்பது; இதனால் இந்நூல் ஐந்திணைக்கோவை யென்றும் பெயர் பெறும்."

இத்திருவாவடுதுறைக் கோவையென்பது திருவாவடுதுறையிற் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமாசிலாமணியீசர்மீது ஷை யாதீனத்துச் சுப்பிரமணிய முனிவரியற்றியது. இவர் இற்றைக்குச்சுமார் 113-வருஷங்களுக்கு முன்னிருந்தவராகத் தெரியவருகிறது. இவருக்கு வித்தியாகுரு சிவஞானபோதத்தின் திராவிட மகாபாஷ்யகர்த்தராகிய ஸ்ரீசிவஞான முனிவர். இவருடைய ஞானகுரு திருவாவடுதுறை யாதீனத்தில 13-ம் பட்டத்திருந்த அம்பலவாண தேசிகரெனத் தெரியவருகிறது. இவருடையவரலாறு எழுதிய பதிப்பாசிரியர் பின்வரும் விசேஷகுணங்கள் இவரிடத்தமைந்திருந்தனவாகத் தீட்டியிருக்கிறார்:—"வித்தியாகுருவினிடத்தும், ஞானகுருவினிடத்தும் இடைவிடாத மெய்யன்புடைமை, சிவபக்தி, அடியார்பக்தி, கல்விமான்களை ஆதரித்தல் நன்றிமறவாமை, மேன்மேலும் நூல்களையாராய்தல், அழுக்காறின்மை, பிறர்பாலுள்ள குணங்களைப்பாராட்டல், ஸ்தல யாத்திரை செய்தல் விருப்பம்; யாவர்க்கும் பொருள் விளங்க எளிய நடையாக விரைவில் எவ்வகையான செய்யுட்களையும் செய்யும் வன்மை, ஸங்கீதப்பயிற்சி ஆகிய இவைகள் இவர்பால் அமைந்திருந்த விசேஷகுணங்கள்." இவர் தொட்டிக்கலையென்னுமூரில் ஆசாரிய பதவியும் பெற்று விளங்கினரென்று தெரியவருகிறது. இவருடைய கிரந்தத்திலமைந்துள்ள அருமை பெருமைகளையும், இவர் பாடிய பாடல்களில் பொதிந்துள்ள அதிமேலான உண்மைப் பொருளையும் சிந்திக்குமிடத்து மெய்ஞ்ஞானசித்திபெற்ற மாதவரேயென்று நினைக்கத்தடையில்லை. இவர் இப்படியாயின் இவருடைய ஞானகுருவாகிய 13-ம் பட்டத்திருந்த அம்பலவாண தேசிகரின் மெய்க்கீர்த்தி யெப்படிப்பட்டதாயிருக்கவேண்டுமென்பது சொல்லாமேயமையும். ஆதியில் திருமூலநாயனார் தங்கியிருந்து திருமந்திரம் இயற்றிய இத்தல மகிமை எப்படிப்பட்டதென்று நாம் வர்ணிக்கத் தேவையில்லை. அப்படிப்பட்ட அபூர்வ மகிமை வாய்ந்ததலத்தின் மேன்மையைக் கோவையாக வியற்றி மெய்யன்பர் மனமகிழச் செய்ததும், அதை யாவரும் படித்து மகிழும்படி பதிப்பித்ததும் மிகச்சிலாகிக்கத்தக்கதே. இதைப்பதிப்பித்தமஹாவித்வானின் வல்லமையைப்பற்றிப் புகழ்வது நமக்கு முறையன்று. எனெனில் அவரைப்புகழ அவரிலும் மேலான சக்தி வாய்ந்திருத்தல் வேண்டும். அது நம்மிடத்தில்லையாம். அவர் வழக்கம் போல் சிரமத்தைப் பாராட்டாது வித்தையிடத்து அவருக்குண்டான உள்ளன்புகாரணமாக ஊக்கமேற்கொண்டு, 'செய்வன திருந்தச் செய்' என்னும் அவர் கொள்கைக்கிணங்க அவர் தொட்ட காரியத்தை முட்டறச்செய்து முடித்துளார். தமிழ்ப்பாஷையை அலக்ஷியம் செய்து அதைக் கற்பதினால் பயனில்லை யென்போர் பிரம்மஸ்ரீ. வே. சாமிநாதையரவர்கள் பதிப்பித்த கிரந்தங்களை ஆராய்ந்து பார்க்கும் சக்திவாய்ந்து அப்படிச் செய்தாலும் சரி, அல்லது அவருடன் நேரிற் பழகி, சம்பாஷித்து அவரிடத்து விளங்கும் குணமகிமைகளையும் அறிவின் பெருமையையும் அறிந்தாலும்சரி, அவர்கள் உடனே

தங்கள் அபிப்பிராயத்தை மாற்றிவிடுவார்களென்பது திண்ணம். ஆகையால் அவரது அருமை பெருமையை உள்ளபடி யுணர்ந்து கொண்டாடக்கூடியவர் அவரிடத்து அளவிலாமதிப்பு வைத்துச்சிறப்புச்செய்து பாராட்டத்தக்கதேயன்றி மற்றப்படி அவரை ஆதரித்துப் பேசுவதாக நடிப்பது அபசாரமாகும். உண்மையில் அவர் அபார உழைப்பையும், வித்வத் சாமர்த்தியத்தையும், பொறுமையையும், பூர்ண குணத்தையும் மெச்சிப் பேச யோக்கியதையுள்ளார் நம்முள் வெகு அபூர்வமாயுள்ளார். அவருடையதற்கால நிலை மனிதருடைய புகழ்ச்சி யிகழ்ச்சிக்கு மேற்பட்டதாகப் போய்விட்டது. அவர் ஊருக்குழைக்கவில்லை உலகுக் குழைக்கவில்லை, பேருக்குக் கீர்த்திக்கு முழைக்கவில்லை. தமிழனிடத்து அவர் வைத்த அன்பு அவரை அதில் லயிக்கச்செய்துவிட்டது. அன்பில் லயித்து அன்பிற்குழைப்போர் அன்பு பெருகி அன்பேயாவர். அதுவே யவர்களுக்கு எல்லாப்பயனுமளிக்கும்பாக்கியமாம்:பேரருள் நல்கும் புண்ணியமாம்.

“முத்தி யென்னப்படும் மங்கையைச் சேரமுயல் [பவருஞ்
சத்தியென்னப் படுமீசனருளன்றிச் சார்தலுண் [டோ”

என்றபடி, அன்பிலுழைத்து அன்புவளர்த்து அன்பில் லயிக்கப் பெற்றவர்களீசனருள் பெற்றபாக்கியவான்களாதலால், அவர்கள் எல்லாச் செல்வங்களிலும் அழியாச் செல்வமான பேரின்பம் பயக்கும் “முத்தி யென்னப்படும் மங்கையை” ச்சேரவரும் மணாளராவார்கள். அவர்களுக்கு உலகத்தார் புகழ்ச்சியும் இகழ்ச்சியும் ஒன்றே.

அது அப்படியாயினும், உலகத்தாருய்ய அவர்கள் தம்கடமையைக்குறைவறச்செய்து தீர்த்தல் வேண்டுமே. இதை நினைக்கும்போதுதான் நம் எண்ணம் ஸ்வர்க்கமத்தியபாதாளமூன்றும் ஒருங்கே சுற்றிவரவேண்டியதாயிருக்கிறது. குருவைப் போலிருப்பான் சிஷன். இப்பொழுது குருவிருக்கும் நிலைமையோ சொல்லற்பாலதாயில்லை. ஆதியில் மஹாத்மாக்களிருந்த குருபீடங்கள் துராத்மாக்களால் வகிக்கப்பட்டு, சத்தியமும், சிவபக்தியும், மெய்ஞ்ஞானமும், அடியார் குழாமும் விளங்கிய தலங்கள், அசத்தியமும், ஆபாசமும், கழுத்தில் தாவடமும் மனதில் அவகடமும் நிறைந்த ஆஷாடபூதிகள் கும்பலும் நிறைந்து, மெய்ஞ்ஞானத்திற்குப் பதிலாகப்பொய்ச்சாக்ஷியும், தத்துவாராய்ச்சிக்குப் பதிலாக, சட்ட ஆராய்ச்சியும், காமநுகர்ச்சியும், இவற்றின் பரிவாரத்தில் வரும் அடிதடி சண்டை, மண்டை யுடைதலும், அடிவாரண்டு பிடிவாரண்டுக்குப் பயப்பட்டு ஒளிந்து திரியும் தம்பிரான் சாமிகளால் எம்பிரான் கோயிலும் தலமும் குறைவெய்தி ஜனங்களுக்குள்ளெல்லாமேச்சுப் பேச்சாய் விளங்குகிறது. இராஜாங்கத்தார் மதவிஷயத்தில் பிரவேசிக்கிறதில்லையென்றது பசுத்தோல் போற்றியபுலிகளுக் கொப்பான துறவி வேடம் பூண்ட பிறவிக் குருடராம் பாதகர்களுக்குத் தற்காலம் பெருநலம் விளைப்பதாக முடிந்திருக்கிறது. பூர்வத்தில் சத்தியம் பரவி சாத்விகம் மேலெடுப்பதற் கென்றேற்பட்ட ஸ்தாபனங்களும் அவைகளைச் சேர்ந்த அளவற்ற திரவியங்களும், தேசத்துக்கும் ஜனங்களுக்கும், இராஜ்ஜியத்துக்கும் கேடுவிளைக்கத்தக்கதாக பொய்ச்சாக்ஷி, பொய்வழக்கு, அடிதடிசண்டைகளில் உபயோகிக்கப்பட்டு வருகின்றன. ஒரு மடத்தலைவர் அக்கிரமஞ் செய்து காராக்கிரகவாசம் புகுந்தார். ஒருவர் கொலையாளிகைக்கிரையானார். ஒருவர் ஊரை விட்டோடி ஒண்டி யொளித்து இரவைப்பகலாக்கி, பகலை இரவாக்கிக் கொண்டு, அநியாய அக்கிரமங்களில் மூழ்கித்திரிகிறார். மற்றொருவர் காமத்தில் மூழ்கிக், கண்பஞ்சடைந்து கிடக்கிறார். இப்படி யின்னுமெத்தனையோ பேர் துறவு பூண்டு மறைவில் தாசியுறவு தேடித்திரிகிறார். இவர்கள் கெடுவதில் இவர்கள் மட்டுமழிந்து போவதாயிருந்தால் நாம் அவ்வளவு வருத்தப்படவேண்டியதில்லை. இவர்கள் துறவுவேஷம் பூண்டதினாலும், மடாதிபதிகள், மதாசாரியர்கள், என்று பட்டங்கட்டிக் கொண்டு பெருமிதமா யேற்பட்ட தர்மநிதிகளைத் துர்விநியோகப்படுத்தி வருவதாலும், தேசம், மதம், ஜனம், இராஜ்ஜியம், எல்லாவற்றிற்கும் உண்மையில் அளவிடக்கூடாத தீங்கு விளைத்து வருகிறார்கள். இவர்கள் மென்மேலும் அக்கிரமத்தில் மூழ்கி வருவதில் ஒரு ஆறுதலுண்டு. இரவில் நிசியதிகரிக்க அதிகரிக்க இருட்படலம் அதிகமாயுலகை மூடிக்கொள்வ துண்மையாயினும், பகல்பொழுதும் சமீபித்துக் கொண்டு வருவது நிச்சயம். இருட்டு அதிக

ரிக்க அதிகரிக்கவிடியற்காலம்கிட்டி விட்டதென்கிற நம்பிக்கை யுண்டாவதுபோல் இவர்கள் அக்கிரமம் அதிகரிக்க அதிகரிக்க விமோசனகாலம் கிட்டி வருகிறதென்கிற எண்ணம் சாதுக்கள் மனதுக்கு ஆறுதலைக்கொடுத்து சாந்த விருத்தி செய்து வருகிறது. பகவான், உலகத்தில் அக்கிரமங்களதிகரித்துத் தலையெடுத்த போதெல்லாம் தான் அவதாரமாகித் தர்மத்தை நிலை நிறுத்துவதாகச் சொல்லியது பொய்யல்ல மெய்யே. உளக்கண் பெற்றோர் உண்மையைக்கண்டு களிப்பார்.

"ஞானமிலார்வேடம்பூண் டிந்தநாட்டிடை
யீனமதேசெய்திரந் துண்டிருப்பினு
மானநலங்கெடுமப் புவியாதலா
லீனவர்வேடங்கழிப்பித்தலின்பமே."

—திருமந்திரம்.

இவ் "வீனவர் வேடங்கழிப்பித்தல்" இராஜாங்கத்தார்கடமையாம். இக்காலத்தில் நமது இராஜாங்கத்தார் தாங்கள் அந்நிய மதஸ்தர் என்கிற காரணம் பற்றி இதுவிஷயங்களில் ஒதுங்கிநிற்க உடன்பட்டிருப்பதால், அக்கடனை நம்மளவிற்கு நாம் தீர்த்துக் கொள்ளவேண்டியதாயிற்று.

---

## சஞ்சோக்தை சுயம்வரம்

அல்லது

## ப்ரித்விராஜா சரித்திரம்.

### *XIX ஒரு பாரதியும் அவர் பரிவாரங்களும்.

ஸரஸ்வதி ஸ்தோத்திரம்.

"மண்கண்ட வெண்குடைக் கீழாமேற்பட்டமன் [னருமென்
பண்கண்டளவில் பணியச்செய்வாய் படைப்போ [ன் முதலாம்
விண்கண்ட தெய்வம் பல்கோடி யுண்டேனும் [விளம்பிலுன் போல்
கண்கண்ட தெய்வமுளதோ சகலகலா வல்லியே."

கானோஜில் இப்படி உத்ஸவாரம்பம் நடந்து வருகையில்,டில்லியி ல்ப்ரித்விராஜா செய்தி யென்னவென்றுபார்த்து வருவோம். அவன் கானோஜுக்கு வந்துதங்க விக்ரஹத்தை யபகரித்துப் போனது முதல் மறுபடியும் கானோஜுக்கு வந்து ஜயசந்தராஜன் செய்யும் யாகத்தைக் கலைத்து அவர் புத்திரியை பலாத்காரமாக வெடுத்துக் கொண்டு போய்க் கலியாணம் செய்து கொள்ள வேண்டுமென்கிற எண்ணம் சதா அவனுள்ளத்திலிருந்து உறுத்திவந்தது. அவன் தன்னுடைய இராணிகள் ஒவ்வொருவரிடத்தும் கானோஜுக்குப் போகவேண்டுமென்று சொல்லிவர அவர்கள் அவனை விட்டுப்பிரிய மனமற்றவர்களாய் காலத்துக்கேற்றபடி சாக்குப் போக்குச் சொல்லி அவனை முன்றயே ஒவ்வொருவரும் தத்தம்மிடம் இருத்திக் கொண்டு விட்டார்கள். இப்படி கிட்டத்தட்ட ஒரு வருஷமும் கழிந்து, வசந்தகாலம் மறுபடியும் சுற்றிக் கொண்டு வந்தது. ஒருநாள் அவன் உத்யானவனத்தில் தனியாகவிருக்கும் பொழுது குறத்தி ஒருத்தி பக்ஷி விற்கிறதாகச் சொல்லி, அதிசயமான ஒரு புறுவையும் கிளியையும் கூண்டிலடைத்து அவனிடம் கொடுத்து வெகுமதி பெறவந்திருக்கிறதாகச் சொல்ல, அவைகளைப் பெற்றுக் கொண்டு அவளுக்கு கனத்த வெகுமதி கொடுத்து அனுப்பி விட்டான். அப்புறுவின் கண்டசரம் அதிவினோதமாக விருக்கக்கண்டு அதை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கையில் அதில் ஒரு ஸ்லோகம் அதிசயமாக அமைக்கப் பட்டிருப்பதைக்கண்டு வாசித்து உடனே அப்புறுவைக்கால் விலங்குதரித்துப் பறந்துபோக விட்டுக் கிளியை மட்டும் தன்னிடத்தில் வைத்துக் கொண்டான். **ப்ரிந்விராஜா** அக்கிளியைத்தன் மஞ்சத்தருகே கட்டித் தொங்க விடச்சொல்லி நித்திரை செய்கையில் நடுச்சாமத்தில் ஒரு இனிய குரலோசைகாதில் விழக்கேட்டுவிழித்துக்கொண்டு பின்னுமதை உற்றுக்கேட்டான். அப்பொழுது அக்கிளி இனியகுரலில் ஒரு பதம்பாட அதைக்கேட்டுத் தூக்கம் நீங்கி, உடனேதான் கானோஜுக்குப் புறப்படவேண்டுமென்று தீர்மானித்தான். தீர்மானிக்கவும் தனது குருவுக்கு அதுசெய்தியைத்தெரிவித்து, தன்னுடைய **சாமந்த**வீரர்களெல்லாம் அவனோடு புறப்பட உடனே தயாராகவேண்டுமென்று சொல்லியனுப்பினான்.

சைத்ர மீ 3உ ஆதிவாரம் ப்ரித்விராஜா டில்லியைவிட்டுப் புறப்பட்டான். அவன் தன்னோடு 100 சாமந்த வீரர்களையும் ஒவ்வொரு சாமந்தருடனும் 10-க்குதிரைவீரர்களையும் பொறுக்கியெடுத்துக்கொண்டு "**அந்தர்வேதி**" க்கு யாத்திரை போவதாகச் சொல்லிப்புறப் பட்டான்.

---

* Continued from Vol. VIII, NO. 12, P. 358.

ப்ரித்விராஜா தன்னிடம் பிரதானியாயிருந்த கைமாஸ் என்பவனை அந்தப்புரத்துப் பெண்களில் ஒருத்தியான கர்ணவதியோடு காமவேட்கைகொண்டானென்று அவன் தலையை வாங்கிவிட்டான். காலியாயிருந்த அவனுடைய ஸ்தானத்தில் அபூ அரசனை சுலக்ஷண ஸிம்மனை இப்பொழுது முதல் மந்திரியாக நியமிக்கலானான். மந்திரியினுடைய இலக்ஷணங்களைச் சொல்லுங்கால், **சந்துபாரதி**, அமைச்சன் ஆற்றல் நிறைந்தவனாகவும், சிற்றரசர்கள் மதிக்கத்தக்கவனாகவும், லஞ்ச பரிதானங்களால் அசைக்கப்படக்கூடாத இழுக்கற்ற சத்வகுணமுடையவனாகவும், ஆகிருதியில் உயர்ந்தவனாகவும், பகைவரை வெல்லும் சக்திவாய்ந்தவனாகவும், பரிசுத்த வம்சத்தில் உதித்தவனாகவும், ராஜதந்திரங்களில் தேர்ந்தவனாகவும், ஸ்திரீகள் மயலில் சிக்காத சாந்தகுண சீலனாகவும், துராகிருதமாக அரசன் செல்வத்தை யதிகரிக்கச்செய்ய விரும்பாதவனாகவு மிருக்கவேண்டுமென்கிறார். இக்குணங்களெல்லாம் யாரிடத்தொருங்கமைந்துள்ளனவோ அவனே பிரதானியாக விருக்க யோக்கியன். இக்குணங்களெல்லாம் இந்த சுலக்ஷணனிடத்தில் பொருந்தியிருந்தன. அன்றியும் ப்ரித்விராஜாவின் இராணிகளில் ஒருத்தியான 'இஞ்சினி' தேவிக்குத் தகப்பனுமாயிருந்தான். இவனுடைய பேரை டில்லியிலுள்ள ஜயஸ்தம்பத்தில் இன்றைக்கும் காணலாம். இவனை மந்திரி ஸ்தானத்திலும் சித்தூர்வம்சத்து இரகுவம்ஸியைத் தானில்லாதகாலத்து டில்லியைக்காத்துவர ஸ்தானாதிபதியாகவும் நியமித்து **சந்துபாரதியோடும்**, 100—சாமந்தர்களோடும் சூரர்களோடும் பிரயாணத்துக்குப் புறப்பட்டான். ப்ரித்விராஜா தன்னுடைய 12 இராணிகளிடமும் சென்று ஒவ்வொருவரிடத்தும் விடைபெற்றுக்கொண்டு இராத்திரி 2-முகூர்த்தமானதும் மூன்று முகூர்த்தத்தில் யாத்திரைகிளம்பினான். இரவிலே வெகுதூரம் நடந்து நடுநிசியில் ஒரு தோப்பிலிறங்கி யிளைப்பாறத் தங்கினான். இராத்திரியோ மையிருட்டாயிருந்தது. இடையிடையே மின்னல் தோன்றி மறைந்து அந்நள்ளிருளின் கோரத்தை யதிகமாகத் தோன்றச்செய்தது. ப்ரித்விராஜா தன்னுடைய கூடாரத்தில் தனியாகப் படுத்து ஆயாசந்தீர இளைப்பாற நினைத்தான். அப்பொழுது ஒரு கூகை அவன் தலைக்கு மேலுள்ள ஒரு மரக்கிளையிலிருந்து 'கூ, கூ,' வென்று கத்தின சப்தம் அவன் காதில் விழுந்தது. அதைக்கேட்டான். இந்த அபசகுனத்தைக்கண்டு சிறிது சிந்தையுற்றான். மறுபடியும் உற்றுக்கேட்டான். உடனே அம்பையும் வில்லையுமெடுத்தான். "கூ, கூ" வென்ற சப்தம் காதில் விழுந்தது. அதைக்கொண்டு அந்த சப்தம் வந்த இடத்தை மனோசக்தியாலுணர்ந்து குறிவைத்து அந்த நள்ளிருளில் பாணத்தை விட்டான். 'கூ, என்கிற அடுத்த சப்தத்தோடு அக்கூகையின் உயிரும் அதை விட்டுப்போய்விட்டது. அவனுடைய சிரவண சக்தி அவ்வளவு நுட்பமானது. சப்தம் வந்தவழியை மனதால் குறிப்பிட்டுக்கொண்டு அக்குறி தப்பாமல் அம்பை யெய்ய அது அந்த சப்தம் வந்தவிடம் தப்பாமல் பட்டு அக்கூகையின் உயிரைக் கொள்ளைகொண்டது. அஸ்திரவித்தையில் அவ்வளவு தேர்ச்சிபெற்றவன். வானவித்தையிலும் மற்றப் போர்வகையிலும் இப்படியே அற்புதத்தேர்ச்சி பெற்றிருந்தான் அவன். பாரதக்கண்ட முழுமையிலும் அவனிலும் மேலான யுத்தவீரன் வேறுயாருமில்லையெனப் புகழ்பெற்று விளங்கினான்.

முதலில் நேர்ந்த துர்ச்சகுனத்தை அவன் சாமர்த்தியத்தால் இவ்வாறு நீக்கிவிட்டு ப்ரித்வி ராஜாவும் அவன் சாமந்த ராஜாக்களும் மற்ற வீரர்களும் குதிரையேறிப் பிரயாணத்தை நடத்தினார்கள். அந்த **சாமந்த வீரர்கள்** ஒவ்வொருவரும் ஆயிரம் வீரர்களுக்குச் சமானமாகச் சொல்லலாம். பாரத யுத்தத்தில் போர் செய்த வீரர்களைப்போல் அவ்வளவு மேலான மஹாவீரர்கள். வெகுவேகங்கொண்டு வழி நடந்து காளிந்தி (யமுனை) நதிக்கரையில் வந்து மறுபடியும் இளைப்பாறத் தங்கினார்கள். காளிந்தியைக்கடந்து செல்லுகையில் இன்னும் சில துர்ச்சகுனங்கள் நேர்ந்தன. இந்த யுத்தத்தில் தான் வீழ்ந்து மடிவது திண்ணமென்று ப்ரித்விராஜாவுக்கு உள்ளத்தில் பட்டது. பட்டும் அவன் அஞ்சவில்லை. உற்சாக மேலிட்டு அவனுடைய சாமந்தர்களைச் சந்தோஷப்படுத்தி, "உதாரம் பெருகும் யுத்த களத்தில் கங்கைக்கரை கண்களுக்குத் தோற்ற யுத்தமுனையில் வீழ்ந்து மடியக் கொடுத்து வைத்திருக்கவேண்டும்! அவர்களுக்குத்தான் இந்த மேலானகதிகிடைக்கும்; எல்லாருக்கும் கிடைக்குமா

"என்ன?" என்று சந்தோஷமாகப் பேசிக்கொண்டு சென்றான்.

* * *

வசந்தகாலத்தில் அரும்புவிட்டுள்ள மொட்டுகள் விடியற்காலையில் வாசனைவிட்டு மலருந்தருவாயிலிருந்தன. இளங்கொடிகள் அழகாய் மரத்தில் படர்ந்து விளங்கின. சாமந்தர்கள் அவைகளைப் பார்த்து ஆடவன் தோளைத்தழுவிய அணங்கைப்போல இவை விளங்குகின்றன பார் என்று சொல்லிச்சிரித்தார்கள். இந்த மொட்டுகளெல்லாம் நம்மைக்கண்டு முறுவலித்து மந்தகாசம் செய்து நம்மேல் மரகந்தப்பொடியைத் தூவித் திருவிழாக் கொண்டாடுகின்றதைப்பார் என்று சொல்லிச் சிரித்தார் சிலர். இப்படி வழியிற் கண்ட காட்சிகளைப் பார்த்து மனமகிழ்ந்து உல்லாசமாய்ப் பேசிக்கொண்டும் சிரித்துக் கொண்டும் வழி நடந்து டில்லியிலிருந்து 32 கோசதூரமுள்ள 'யூஷான்' என்னும் ஒரு கிராமத்தில் தங்கி ஒரு முகூர்த்தம் இளைப்பாறி மறுபடியும் சவாரி புறப்பட்டார்கள். அது திங்கட்கிழமை விடியற்காலம்; கொஞ்சதூரம் வழிநடந்து செல்லவும் அவர்கள் ஒரு கிராமத்தைத் தாண்டிப் போக நேரிட்டது. அங்கே தொம்பங் கூத்தாடிகள் அறுபத்தி நாலடிக் கம்பம்நட்டு ஆடிக்கொண்டிருந்தார்கள். அக்கம்பத்தினுச்சியில் எழுவேல்கள் கட்டி அவ்வேல்முனைகளின் மேல் ஒருதொம்பச் சிறுக்கியேறி விழாமற் படுத்திருந்தாள். இப்படி வித்தையாடிக் கொண்டிருக்கையில், கீழேயிருந்தெல்லாரும் கண்ணும் கருத்தும் அவள்மேல் செல்ல நிசப்தமாய் நின்று அண்ணாந்த கழுத்துக் கோணாமல் தலை அசையாமல் கண் கொட்டாமல் பார்த்து வந்தார்கள். மேலேயுள்ள தொம்பச்சி கையை விரித்து "ஹா! ஹா! ஜே! ஜே" என்று கத்தின குரல் கேட்டது. உடனே அவள் நிலைதவறிப் போக, தலைவேறு கைவேறாகக் கீழே விழுந்து கடைசியில் அவள் உடலும் அவ்வளவு உயரத்திலிருந்து விழுந்து சிதறி இரத்த வெள்ளம் பரவத் தரையில் கிடந்தது. இதைக்கண்ட சாமந்தர்கள் பேச்சற்றுப் பிரமை கொண்டு ஒருவரையொருவர் ஊமைபோல் பார்த்துத் திகைத்து நின்றார்கள். இவ்வளவு துர்ச்சகுனங்களைக் கண்டும் அவர்களில் எவரும் தம்மரசனை நோக்கி என்னகாரியமாக எங்கே யாத்திரை புறப்பட்டுப் போகிறோமென்று கேட்கத்துணியவில்லை.

"அவர் எண்ணத்தைக்கேட்பானேன். அவரைச் சேவித்து அவருக்காகநம்பிராணனை விடுவது நமது கடமையேயன்றி மற்ற விசாரமெல்லாம் நமக்கேன்?" என்பார் ஒரு சாமந்தர்.

"விதித்த விதியை விலக்கவுமாமோ?....ஊழ்வினையுள்ளபடி வந்தே தீரும்" என்பான் இன்னொரு சாமந்தராஜன்.

"பாரதி யொருவரே அவரெண்ணத்தை யறிவார் போலும். ஸ்ரீ குருராஜ் அவர்களுக்குக்கூட அவர் தம் கருத்தைச் சொல்லவில்லை" யென்பார் இன்னொரு சாமந்தர்.

ப்ரித்விராஜனோ ஒன்றுக்கு மஞ்சவில்லை. அவன் புறப்பட்ட காரியம் எதுவோ அதை நிறைவேற்றியே தீரவேண்டும். அந்தப் பிரயத்தனத்தில் உயிர் மாண்டால் ஸர்வோத்தமம்: பெறற்கரிய பெரும்பதவி சித்திப்பது நிச்சயம். ஆதலால் சஞ்சலமேன்? வழி நடவுங்கள்!

பொழுது புலர்ந்தது: இரவும் வந்தது. ப்ரித்விராஜாவும் அவனுடைய சாமந்த சீமந்தர்களும் பரிவாரங்களும் ஒன்றுக்குமஞ்சாது ஒரு கவலையுங் கொள்ளாது சூரிய சந்திரர்கள் விண்ணில் வழிநடப்பது போலவர்கள் மண்ணில் வழிநடந்து சென்றார்கள். அவர்களுடைய யாத்திரைமுடிவு கிட்டிவிட்டது. அவர்களரசன் உத்தேசித்துச் செல்லுமிடம் நெருங்கிவிட்டது. ப்ரித்விராஜாவின் சேனையைக் கணக்கிட்டுப்பார்க்க இதுதான் சமயம். அவர்களெல்லாரும் அதோ அணிவகுத்து நிற்கிறார்கள். ப்ரித்விராஜா சந்திரனைப்போல் நடுநாயகமாக விளங்க அவரைச் சுற்றி 100 சாமந்தர்கள் நக்ஷத்திரங்களைப்போல் அசைவற்று நிற்கிறார்கள். ஒவ்வொரு சாமந்தராஜாவுக்கும் 10-ப் பேர் குதிரைவீரர்கள்: இந்த துரகவீரர்கள் ஒவ்வொருவருக்கும் 5 படையாட்கள்: இப்படியாக இவர்கள் தொகை மொத்தம் 100 சாமந்தர்கள்: 1000 குதிரை வீரர்கள் : 5000 பேர் வீரர்கள் : இவ்வளவு சைனியத்தோடே ப்ரித்விராஜாவும் இருளைவெல்லவரும் சூரியனைப்போல் டில்லியிலிருந்து கானோஜுக்கு சமீபத்தில் வந்து

விட்டான். அவன் கானோஜை நெருங்கவும்பொழுது விடியக்கண்டு ப்ரித்விராஜாவை சூரியனாகவும், அவனுடைய சேனைகளையெல்லாம் கிரணங்களாகவும் உவமித்து பகை நகரையும் அங்குள்ள சேனைகளையும் இருட் படலத்துக்கு ஒப்பிட்டு சந்துபாரதி வர்ணித்து பாடுகிறார். இவ்வீரர்கள் ஒவ்வொருவரும் புகழுடம்பே பெரிதென்று நினைக்கும் புண்ணியர்கள். பிராணனுள்ளமட்டும் தங்கள் அரசனைவிட்டுப் பிரிய ஒருவரும் நினையார்கள். தடாகத்தில் முளைத்த தாமரைகள் நீர் பெருகப் பெருகத் தாமும் தலையெடுத்துயர்வதுபோல, அபாயம் நெருங்க நெருங்க அவர்கள் உள்ளம் பூரித்தெழுந்தது.

* * *

கன்யாகுப்ஜத்தில் சஞ்சோக்தை சுயம்வரம் நடப்பதற்காகக் குறிக்கப்பட்ட நாள் நெருங்கிவிட்டது. அன்றையதினத்தில் அங்கரின் கீழ்த்திசையில் சூரியனுதயமானதோடு, மேற்றிசையில் ப்ரித்விராஜன் தோன்றினான். உதயகிரியி லிருந்தெழுந்த சூரியன் அஸ்தகிரிப்பக்கத்தில் தோன்றிய சூரியனைப்பார்த்தான். இன்றைச் சூரியோதயம் தொடங்கியதோடு ஹிந்துஸ்தான ராஜமகிமையாம் சூரியாஸ்தானமும் தொடங்கிற்று என்று காட்டியதுபோல் விளங்கிற்று.

அவர்கள் டில்லியைவிட்டுப் புறப்பட்டு 5-நாளாய் விட்டது. 4-ம்நாளிரவு **தௌஹெல்பூர்**, சேர்ந்து விடியற்காலையில் '**சங்காபுரம்**' வந்து சேர்ந்தார்கள். கன்யாகுப்ஜம் (கானோஜ்) இன்னும் 2-யோஜனை தூரம் தானுள்ளது. இன்றைக்கு வியாழக்கிழமை, குருவாரம். ஆதிவாரம் டில்லியைவிட்டுப் புறப்பட்டவர்கள் குருவாரம் கானோஜுக்கு 2-யோஜனை தூரத்தில்வந்து பாளயமிறங்கி விட்டார்கள்.

இங்கே ப்ரித்விராஜாவும், சந்துபாரதியும் இன்றைக்கு நடக்கப்போகிற விஷயங்களைப் பற்றித்தனித்துப்பேசிக்கொண்டார்கள். சந்துபாரதி ப்ரித்விராஜாவின் அரண்மனை வித்வானாதலாலும் கவிராஜன் என்று பேர்பெற்றவராதலாலும் அவர் ராஜவிருதுகளோடு சஞ்சோக்தை சுயம்வரத்துக்காக கானோஜில் பிரவேசித்து ஜயசந்திரன் அரண்மனையில் விருந்தாளியாக விருக்கவேண்டுமென்றும், ப்ரித்விராஜா அவருடன் கூடவரும்அடைப்பைக் காரனாக வேஷம் போட்டுக்கொண்டு அவரைத்தொடர்ந்து செல்ல வேண்டியதென்றும் சைனியங்களெல்லாம் சங்கரபுரத்திலே யுத்தத்துக்கு சித்தமாகத்தங்கியிருக்கவேண்டியதென்றும் அவர்களுக்குள் ஏற்பாடு செய்துகொண்டாய்விட்டது. "வெண்கொற்றக்கொடை பாரதிக்கு எவ்வளவு நன்றாகப் பொருந்துகிறது பார்" என்று ப்ரித்விராஜாசொல்ல, "அடைப்பைக் காரன் வேஷமும் உங்களுக்கு நன்றாகப் பொருந்தியிருக்கிறது!" என்று பாரதிபதில்சொல்ல அவர்களிருவரும் சிரித்துக் கொள்வார்கள். இந்தப் பேச்சுகளை எட்டியிருந்து கேட்டுக்கொண்டிருந்த சாமந்தர்களில் ப்ரித்விராஜனுடைய சிற்றப்பனாகிய **கிருஷ்ணராயருக்கு** இந்த பாரதியின் செய்கையும் பேச்சும் கர்ணகடூரமாயிருந்தது. "இந்த நாசமாப்போகிற பாரதி குசுகுசு என்று பேசிப்பேசி அரசனைத்தன் வலையில் சிக்கச்செய்து வருகிறான். இதெல்லாம் கடைசியில் நம் தலைபோகிற காரியமாகமுடியும். இவன் தொழில் இவனைக்காப்பாற்றுகிறது. நமக்கல்லவோ தலைபோகிறது! இவனுக்கென்ன!" வென்று சீறினான் கிருஷ்ணராஜன்.

**கோவிந்தராய்** என்னும் இன்னொரு சாமந்தராஜன் அவர் கையைப் பிடித்துத்தன் கையில் கோர்த்துக் கட்டிக்கொண்டு அவரைச் சாந்தப்படுத்திக் கோபத்தைத்தணித்து பாரதி பேரில் அவருக்குள்ள சீற்றத்தையுமாற்றினார்.

ப்ரித்விராஜா பாரதியோடிப்படிப் பேசிக்கொண்டிருக்கையிலே, மனதிலுள்ள பாரம் தீர்ந்த காரணத்தினாலோ, பிரயாணத்தின் முடிவுகண்ட சந்தோஷத்தினாலோ அவர் ஆயாசமேலிட்டு அயர்ந்து போனவர் போல் காணப்பட்டார். கைகள் சோர்ந்து வீழ்ந்தன. கண்ணிமைகள் மூடின. நித்ராதேவி பிரசன்னமாகி விளங்கினாள். உட்கார்ந்தபடி அவர் ஒரு ஆசனத்திற் சாய்ந்து நித்ரைபோனார். களைதீரத் தூங்கட்டுமென்று பாரதியும் அவரை யாரும் எழுப்பாதபடி கிட்டவிருந்து பார்த்து வந்தார். அப்பொழுது ப்ரித்விராஜா உளக்கண்முன் மின்னற்கொடியிலிருந்திழிந்த மாதரசிபோல் ஒரு பெண்ணுருவம் தோன்றிற்று. அதன் அழகைக்கண்டு மகிழ்ந்து, மோகித்து "அன்புருவே! நீயார்! என்றுவினவினார்."

"நான்தான் சஞ்சோக்தை: நான் சத்தியவதாரம். ஸத்யயுகத்தில் என் தந்தை திரிபுராசுரனையெதிர்த்து நாசம் செய்யக்கண்டேன். திரேதாயுகத்தில் ஸ்ரீராமச்சந்திரர் அவதாரமாகி இராவண சம்ஹாரம் செய்ததைக் கண்டேன். துவாபரயுகத்தில் அர்ச்சுனன் தன் வம்சத்தாரையும் குரு வம்சத்தாரையும் வேரோடறுத்து நாசம் செய்து பூபாரம் தீர்த்ததைக் காணலுற்றேன். இப்பொழுது கலியுகத்தில் சஞ்சோக்தையாக அவதரித்து பிறந்தகுலம் புகுந்தகுலம் இரண்டு மழியக் காணவந்திருக்கிறேன். இதை உனக்கு முன்னுணர்த்த வந்தேன். எச்சரிக்கை!" என்று சொல்லி மறைந்துவிட்டது. இந்த ஸ்வப்பனங் கண்டப்ரித்விராஜா தன் கண்முன்னின்ற உருமறைந்ததும் விழித்துக் கொண்டு, தான் கண்ட கனவை பாரதிக்குச் சொல்லி, அதன் பொருள் விளங்கச் சொல்லும்படி கேட்டான். பாரதியும் முகத்தைத் திருத்திக் கொண்டு மண்டையைச் சொரிந்து கிலேசபாவனை காட்டி, "இதனால் யுத்தம் பிரமாதமாக விளைந்து அதனாலுண்டாகும் இப்பூமியதிர்ச்சியைத் தாங்க முடியாது ஆதிசேஷன் தத்தளிக்கப் போகிறான்" என்று சொல்லிப் பேச்சை மாற்றினான்.

சாமந்தராஜர்களுக்கெல்லாம் விருந்தளித்துபசரித்து ப்ரித்விராஜாஅவர்களைப் பார்த்து "நாம் எத்தனை போர்க்களங்களில் சேர்ந்து நின்று சண்டைபோட்டு ஜயித்திருக்கிறோம். இப்பொழுது நான் இந்த நமது பாரதியாரோடு அவர் அடைப்பையேந்தி ஜயசந்தன் அரண்மனைக்குள் போகவிருக்கிறேன். யுத்தம் எப்படிச் சம்பவிக்குமோ, தெரியாது. இந்த நேரம்வந்தால் நீங்களெல்லாரும் அதற்குத் தயாராகவிருக்கவேண்டியது. இம்முறை சண்டையில் முன்னிற்க வேண்டியவேலை உங்களதாக விட்டிருக்கிறேன். உங்களுடைய ஒத்தாசையையே நம்பியிருக்கிறேன். இங்கிருந்து கானோஜ் 2-கோசதூரமிருக்கிறது. காமத்வஜன் அரண்மனை அதோ தெரிகிறது பாருங்கள். அங்கே போய் நான் அவனைக் காணப்போகிறேன்! ஜாக்கிரதை!" என்று சொன்னான். அதற்கு அவர்களெல்லாரும் ஒரு மனதாய்ச் சொன்னதாவது:

"அடைப்பைக்காரன் வேஷம் போட்டீரானாலும், உமது ராஜ லக்ஷணமும் முகவிலாசமும் அதனால் மறைந்து போமா? விலைமாதொருத்தி தன் ஒயிலை மறைக்க யத்தனித்தால் மறைக்கமுடியுமா? சுசிலன் ஒருவன் தன் சுகுணத்தை மறைக்க முடியுமா? அப்படியே போர் வீரனும் தன் தீரத்தை ஒளிக்க முடியுமா?" என்றார்கள்.

அதற்குள் சிலூகசாமந்தர்:—"பாவாஜி! பாரதியின் அடைப்பை உங்கள் தேஜஸையும் இலக்ஷணத்தையும் அவ்வளவு நன்றாக மறைத்து விடுமென்று நினைக்கிறீர்களா?" என்று கேட்க, மற்ற சாமந்தர்களெல்லாம் ஒரே குரலாய் "வேஷம், வேஷந்தான் நன்றாகப் பொருந்தியிருக்கிறது. தேவதைகள்கூட இவ்வேஷத்தைக்கண்டு மெச்சுவார்களென்றால், கேட்பானேன்?" என்றார்கள்.

"மோசமின்றி எந்த தேசத்தை யாளலாம்? ராஜ்ய பாரமே தந்திரமும் மோசமும் செய்வதுதானே" வென்றார் பின்னும் சிலர். இந்தவேடிக்கை வார்த்தைகளெல்லாம் நிற்க, ப்ரித்விராஜா தன்னுடையபிரதம சாமந்தர்களைக் கூட்டி ஆலோசனை செய்யலானான்.

ஆலோசனை முடிந்ததும், எல்லாரும் கங்கைக் கரையடைந்து கங்கையில் ஸ்நானம்செய்து நகர்க்குள் பிரவேசிக்கலானார்கள். கங்கையிலிருந்து சிலபெண்கள் தீர்த்தம் கொண்டுபோவதைப் பார்த்து சந்து பாரதி "காமதீர்த்தம் பாருங்கள்" என்றார். அதைக் கேட்டு ப்ரித்விராஜா சிரித்தான்.

ப்ரித்விராஜா தன்னுடைய சாமந்த ராஜாக்களில் கோவிந்தாராய், நரஸிங் தஹிமா, சந்த்பண்டீர், ஸோலாங்கி ஸாரங், கூர்மா-பஜூன், பக்ரிராய், கிருஷ்ணராய் இன்னும் சிலரைத் தன்னுடன்கூட வழைத்துக்கொண்டு பாரதியைத் தலைவனாகவும், தான் அவருக்கு அடைப்பைக்காரனாகவும், மற்றவர்கள் அவர் பரிவாரங்களாகவும் சேர்ந்து நகர்க்குள் பிரவேசித்தார். பிரவேசிக்கையில் ப்ரித்விராஜா கிஷ்ணராயனைப்பார்த்து அவர் நெற்றிக்கட்டை* யவிழ்க்கச்சொல்லி

* ஆலோசனைச் சபையில் கிருஷ்ணராய் ஒருகால் அவசரப்பட்டு கோபத்தை வெளியிட்டதனால் அது முதல் அவர் நெற்றிக்கட்டு தரித்திருக்கும்படி அரசன் அவருக்கு விதித்தார். இதைக்கொண்டு எதிரிகள் அடையாளங் கண்டுகொள்வார்களென்று அதை அவிழ்க்கச்சொன்னார்.

தான் கானோஜுக்கு வந்ததற்கு பாரதிதான் காரணமென்று இரகசியமாகச் செப்பினர். இப்பொழுது இவர்கள் நகருள் நுழைந்து விட்டார்கள். சூரியன் ஆகாசத்தில் ஏறவும் அரண்மனையில் கோபுரகலசங்களில் சூரிய கிரணங்கள் பட்டுப் பிரதிபிம்பித்ததனால், அந்தப் பிரதிபிம்பத்தைக்கண்டு பாரதி ஆகாசத்திலுள்ள சூரியன் அதுவோ இதுவோ வென்று மயங்கி அதனால் திசைதப்பி வழிதப்பிப்போயினராம். அவ்வளவு பிரகாசம்! அவ்வளவு ஒளி! அந்நகரின் கூடகோபுரங்களையும் மாடமாளிகைகளையும் பற்றி வர்ணிக்க சாத்தியமில்லை. அவை குபேரன் பட்டணத்தைத் தோற்கடிக்கத் தக்கவாயிருந்தன என்றுமட்டும் சொல்லுவோம். இந்தவெளியாடம்பரங்களை யெல்லாம் விட்டு, யாகசாலையில் நுழைந்து பார்ப்போம். யாகசாலை ஸ்வர்ணமயமாகவிளங்கியது. கொடை, கொடி, சாமரம் முதலிய ராஜவிருதுகளும் விமானங்களும் மற்ற அலங்காரங்களும் கண்ணைப்பறித்துக்கொண்டு மனதைக்கவர்ந்திழுக்கும் சக்திவாய்ந்து விளங்கின. இங்கே தேவதைகளைத் தொழுது நிற்பார் அனந்தம்பேர்; தேவதுந்துமிமுழங்க வாத்தியம் கேட்டானந்திப்பர் அனந்தம் பேர்; தேவகன்னிகைகள் போல் நிருத்தமாதர்கள் நர்த்தனம் பார்த்து மகிழ்வார் அனந்தம் பேர்கள்; கத்திகேடயங்களோடு யுத்த விளையாட்டுகள் விளையாடுவார் பலர்; இதை யெல்லாம்பார்த்த பாரதி "இதென்ன பாரதப்போருக்கு ஆயத்தமா என்ன?" என்று மெதுவாய்ச்செப்பினர். ப்ரித்விராஜாவை அக்கூட்டத்தில் கண்ட ஒரு யோகினி ஆச்சரியத்தால் வீரிட்டுக்கத்தினள்— சந்துபாரதி அம்பிகையைத் தோத்திரம்செய்து அவள் வாயை மூடினர். ஹரசித்தர் கோயிலில் தன்னுடன் வந்தவீரர்களைவிட்டு, பாரதியும் அடைப்பைக்காரனுமட்டு ஜயசந்தராஜன் அரண்மனையைப்போய்ப் பார்த்துவரப் புறப்பட்டார்கள். அபசகுனங்கள் நேரிட மறுபடியும் திரும்பிவந்து இரண்டாந்தரம் புறப்பட்டுச் சென்றார்கள்.

யாகசாலையிலே யாகம் நடந்து வருகிறது. ஆண்டிகள், பரதேசிகள் ஆயிரம் பேர்கள் கூடியிருந்தார்கள். சூதாடுவோர் எண்ணிலர் சண்டையிட்டுக்கொண்டு சூது விளையாடுவதைக் கேட்டார்கள். விட புருஷர் ஒருபக்கத்தில் விலைமாதர்களைக்கண்டு கண்பூத்து நிற்கப் பார்த்தார்கள். இப்படி இன்னும் அங்குள்ள காக்ஷிகளையெல்லாம் கண்டு கவனிக்க நேரமின்றி அவசரமாய் அரண்மனை வாசலைக்கிட்டிச் சென்றார்கள்.

எண்ணிறந்த கொடிகள் காற்றில் பறந்துகொண்டு கருடன்கள் கூட்டமாய் வட்டமிடுவதுபோல் விளங்கின. அழகு மிகுந்த மாதர்கள் பல்கணிவாயில்கள் வழியாக சந்திர பிம்பம்போன்ற தங்கள் முகம் விளங்க மேலே நடமாடிக்கொண்டிருந்தார்கள். இக்காட்சிகளைக் கண்டும் காணாதவர்கள் போல் அரண்மனை வாசலுள் நுழைந்தார்கள். இந்தியாவின் ஒவ்வொரு மூலையிலிருந்துவந்த போர்வீரர்கள் அங்கே ஏகமாய் நிறைந்திருந்தார்கள். பரதகண்டத்தில் பேசப்படும் பல பாஷைகளும் அங்கு பேசப்பட அப்பேச்சரவம் அவர்கள் காதில் விழுந்தது. அரண்மனையின் உள் முற்றத்தில் பைராகிகள் எண்ணிறந்தோர்கூடி சங்குநாதம் ஒலித்துக் கொண்டிருந்தார்கள். ஆயிரம் இராஜபுத்திர வீரர்கள் தங்கள் அரசனுக்கு மெய்க்காவலர்களாக விருந்தார்கள்.—இவர்கள் ஆயுதசாலையில் பலவித வித்தைகள் செய்து தங்கள் சாமர்த்தியத்தைக்காட்டி வந்தார்கள். இவர்களைப்பார்க்கவும் ப்ரித்விராஜாவுக்கு ரோசம் பிறந்தது. பாரதி அரசனுக்குண்டான எரிச்சலை அங்கு காட்டாதபடி அவனைச் சாந்தப்படுத்தி யழைத்துக்கொண்டு போனார்.

உள்வாசலண்டை வந்து சந்துபாரதி தான் டில்லி ராஜ கவியென்று சொல்லி, ராஜ பேட்டிக்கு வந்திருக்கிறதாக ஜயசந்தராஜனிடம் தெரிவிக்கும்படி ஹரிக்காரனுக்குத் தெரிவித்தார். அவன் ஓடோடியும் சென்று அரசனுக்குத்தெரிவிக்க, அவன் தனது அரண்மனைக்கவியையும் குருவையுமழைத்து டில்லி ராஜகவி வந்திருக்கிறாராம், அவர் சந்துபாரதியா வென்றறிந்து உபசரித்தழைத்து வாருங்களென்று அனுப்பினான்.

பாரதியும் பாரதியும் கண்டு குசலப்பிரசனம் செய்து ஒருவரை யொருவர் தழுவிக்கொண்டு யோகக்ஷேமம் விசாரித்துப் பேசியானபின் ஜயசந்தராஜன் பாரதி, புதிதாய் வந்தவரைப் பார்த்து தாங்கள் என் டில்லியரசனைவிட்டு வந்து விட்டீர்களென்று வினவ, அவர் உலகத்தைச் சுற்றிப்பார்க்கவிரும்பி வந்ததாகச் செப்பினர். ப்ரித்விராஜாவின் யோகக்ஷேமம் விசாரித்தபின், கானோஜில் வந்திருக்கும் அரசர்கள்

பேரையெல்லாம் சொல்லக்கேட்க, அவர் அப்படியே சொல்ல, "ஓ, இவர் திரிகாலஞானியாகிய சந்துபாரதியே" யென்று மனதுள் தீர்மானித்துக்கொண்டு முன்னிலும் அதிக உபசாரஞ்செய்து அரசன் சமுகத்துக்கிட்டுக்கொண்டு போனர்.

ஜயசந்தராஜனைக் கண்டு ஆசீர்வாதம் கூறினர்: அரசன்கையைத்தூக்கி சிரம்வணங்கி அதை யேற்றுக் கொண்டனன். "இராஜாதிராஜ ராஜகம்பீர இராஜமார்த்தாண்ட," வென்று ஜயசந்தராஜனைப் புகழ்ந்ததில், சஹா—வனைத் தவிர மற்ற எல்லாராலும் அங்கிகரிக்கப் பட்டவனென்று பச்சைப்புண்ணில் கோலிட்டுப் பார்ப்பதுபோல் அவனை ஸ்தோத்திரம் பண்ண, அரசன் தன் எதிரிபேரைக் கேட்டதும் பல்லைக்கடித்து "இந்தக் கவிகளிடத்தில் தரித்திரம் குடிகொண்டு விட்டது; பிரம்மா விதித்ததை யாரால் மாற்றமுடியும்?" என்று மொழிந்தனன்.

"அரசே! உண்மையுரைத்தீர்! இந்திரனைப்போல் நீர் பொன்னும் மணியும் பூணும் குதிரையும் மழைமாரி பொழிவது போல் பொழிந்தாலும், தரித்திர சின்னமாகிய இந்த வித்வத்கொடை இவையெல்லா வற்றினலும் என்தலை திரும்பாதபடி என்னைக் காப்பாற்றும்" என்றார் பாரதி.

"உமது முகத்தில் தரித்திரகளை குடிகொண்டிருந்தாலும், தேகமும் ஒட்டிப் போயிருக்கிறதே யேன்? ஜங்கள தேசத்தில் (டில்லியரசன்நாடு) புல்லுக்குக் குறைவில்லையே!" என்று அரசன் ஏச, பாரதியார்: "என்தேகம் ஒட்டியிருந்தால், அது என்னரசனேடு மற்ற அரசர்களை வெல்லச் சென்றதனலிருக்கவேண்டும்!" என்று எரிகிற நெருப்பில் ஆகுதி செய்வது போல் அவர் வயிற்றெரிச்சலைப் பின்னும் கிளப்பிவிட்டார்.

தன்னெதிரியைப் பின்னும் ஸ்தோத்திரம் செய்ததைக் கேட்டு ஜயசந்தராஜன் உதட்டைக் கடித்துப் பல்லை நெறித்தான். ஆனலும் என் செய்வது! வித்வானை யென் செய்யக்கூடும் அவன்? "தேசத்திலுள்ள மன்னர்களெல்லாம் வந்து மரியாதை செய்கையில் உமதரசன் மட்டும் என் வரவில்லை? அவப்பன சோமேசர்கூட கானேஜிலிருந்து கூடன் வாங்கித்தானே கலியாணம் செய்து கொண்டார்." என்று கேட்டான். (ப்ரித்விராஜாவின் தாய் கமலாதேவி, ஜயசந்தன்மனைவி ரூபசுந்தரிக்கு உடன் பிறந்த சகோதரி). அதற்கு பாரதியார், "ஆனல் ஒன்று மறந்து விட்டீர்கள், தாங்கள் தெற்கே யுத்தத்துக்குப் போயிருக்கையில் வடக்கே யிருந்து துருக்கர் நும் தேசத்தைக் கொள்ளையிட்டார்களே, அப்போ தென்னரசன் அவனை யெதிர்த்துத் துரத்திராவிடில் கானேஜின் கதியென்னயிருக்கும்? என்னரசன் வில் இன்னும் வளைத்தபடியிருக்க ராஜசூயயாகம் செய்து ஷம்ராட் பட்டம் கட்டிக் கொள்ளத் துணிபவன் யார்? என்னரசன் கீர்த்தி யெங்கும் பரவியுள்ளது. என்னரசனணையினல், இங்கு நீர் செய்யும் இந்த யாகத்தினழகைப் பார்க்கிறதற்காக நான் வந்திருக்கிறேன்," என்று அரசன் வாயை அடக்கினர்.

வாயடங்கியும் கர்வம் தணியவில்லை. ஆகவே அரசன் பின்னும் விஷயத்தைமாற்றி, "இங்கே சூழ்ந்துள்ள அரசர்களெல்லாரிலும் உம்மரசனை யொத்திருப்பவர் யார்?" என்று வினவினர்.

"ஒருவர் கூட இல்லை!" என்று உடனே பாரதி உத்தரஞ்சொன்னர். "ப்ரித்விராஜா கோகுலத்தில் கண்ணன் அவதரித்ததுபோல் இம்மேதினியில் ஒப்புயர்வற்று விளங்குகிறார். ப்ரித்விராஜா பாரத வீரனகிய அர்ச்சுனனைப்போல் விளங்குகிறார். அவர்தான் இக்காலத்துக்கு இராமாவதாரம். ஆருயிருவருஷமும் அனுமதியுமான ஆண்சிங்கம். அப்படிப்பட்டவராக்கும் ப்ரித்விராஜா!" என்று சொல்லி தன்பக்கத்தில் நின்ற அடைப்பைக்காரனுக்கு வணங்குகிற மாதிரியாகக் கையைத்தூக்கி அவன் புகழைப் பாடத்துவக்கினர்.

"வண்மையாற்கல்வியால்மற்பலத்தாலாள்வினையால்
உண்மையாற் பாராளுரிமையால்—திண்மையால்
தேர்வேந்தர்வானேறத்தெள்ளாற்றில் *வென்ற [னேடு
யார்வேந்தரேற் பாரேதிர்

ஜயசந்தராஜனுக்குஆத்திரம்பொறுக்கக்கூடவில்லை.

"திண்ணிய நெஞ்சினனன்| பாரதியும் தன்னெஞ்
சிற்றீங்கு தோன்ற
எண்ணிய மன்பேரவைவிலியம்பியபுன் சொற்க
ளெல்லா மெண்ணி யெண்ணி"

* தெளிவான போர்முறைமை வழியால்.

இப்பாரதிகள் துணிவுக்கும் அக்கிரமத்துக்கு மளவில்லையென்று தூஷித்தார். இதுதான் சமயம்: இதற்குத்தான் காத்திருந்தார் பாரதியார். "உமக்கேன் கேடுகாலம்! முன் ஸத்ய யுகத்திலே பலி சக்ரவர்த்தி கர்வம் தலைக்கேறி இந்த யாகம் செய்யத் தலைப்பட்டான். அதற்குப் பலனாக அவனுக்கு நரகம் வாய்த்தது. திரேதாயுகத்திலே ஸ்ரீ இராமச்சந்திரர் இந்த யாகம் செய்தார். துவாபரயுகத்தில் கிருஷ்ணன் தயவால் தருமபுத்திரர் இதைச்செய்தார். இந்தக் கலிகாலத்திலே இராஜசூயயாகம் செய்யத் துணிபவன் யார்? நீர் என்னவோ தலை தெரியாமற் துவக்கி விட்டீர். முடிவு என்னாகிறது பாரும்!" என்று தைரியமாய்ச் சொன்னார்.

ஜயசந்தன்:—"இவை யெல்லாம் கெட்டன: நாம் தொட்டதை நிறைவேற்றியே தீருவோம்பார்!" என்று கர்வம் தலைக்கேறச் சொல்லி, சிம்மாசனத்தை விட்டிறங்கி பாரதியாரை யழைத்துக் கொண்டு அந்தப்புரம் சென்றான். உள்ளே செல்லுகையில் **கர்ணவதி**யைக் கண்ணுற்றார்கள். இவளோடு பிசகி நடந்ததற்காகவே ப்ரித்விராஜா **கையாஸ்** என்னும் தன் மந்திரியைச் சிரச்சேதம் செய்வித்தான். அவள் டில்லியை விட்டோடி ஜயசந்தன் அரண்மனையில் அடைக்கலம் பெற்று தற்காலம் சஞ்சோக்தைக்கு உயிர்ப்பாங்கியாக அமர்ந்துள்ளாளென்று நாம் அறிவோம். இவள் ப்ரித்விராஜாவுக்கன்றி மற்றவர்க்குத் தன்முகம் திறக்காள். ப்ரித்விராஜா ஒருவனே "ஆணலழகன்" என்பது அவள் எண்ணம். அவனை அரண்மனையினுள் காணவும் அவள் தன் முகத்தை யிழுத்துப் போர்த்துக் கொண்டு புருவத்தை நெறித்தாள். ப்ரித்விராஜாவும் அவளைப்பார்த்து நகைத்தான். ஒஹோ! ஆபத்து வந்ததே யென்று கண்ட பாரதி ஒரு கவிதை பாடினார். அதன் மறைபொருள் என்னவெனில், "பாவி! உன் ஒயிலினால் ஒரு தீரன் மாண்டான் இப்பொழுது அரசனையும் ஆபத்துக்குள்ளாக்க விருக்கிறாயா?" என்பதே. இதைக் கேட்ட அவள் மறைந்துவிட்டாள்.

நகரின் மேற்புறத்தில் அவருக்கு ஜாகையமர்த்தி வைக்கப்பட்டது. அங்கே இராணி ரூபசுந்தரியவர்களுக்கு வேண்டிய மரியாதை செய்து பழவர்க்கங்கள் பட்டுப் பீதாம்பரங்கள் எல்லாம் வைத்து அனுப்பினாள். ஸரஸ்வதி யுபாசகராகிய சந்து பாரதிக்கு வேண்டிய மரியாதைகளெல்லாம் அரசனிடத்திருந்தும் அந்தப் புரத்திலிருந்தும் வந்ததன்றி அவருக்கும் அவருடைய பரிவாரங்களுக்கும் வேண்டியவைகளெல்லாம் வெகுசம்பிரமமாகக் கொடுத்துவர ஏற்பாடுசெய்தார்கள். இப்படி அரசன் அரண்மனையில் அத்தனை சைனியங்களுக்கும் வீரர்களுக்கும் நடுவே சந்துபாரதியோடு அவருடைய அடைப்பைக்காரனும் பரிவாரங்களும் தங்கியிருந்தார்கள். இவர்களை யிங்குவிட்டு சஞ்சோக்தை கதியென்ன வாயிற்றென்று யாருமறியாமல் அந்தப்புரத்தில் புகுந்து பார்த்து வருவோம்.

C. V. S.

## To Our Subscribers.

**Some of our subscribers are still in arrears for Vol. X. These and others will please remit their arrears for Vols. X and XI at once with their advance for the current volume or receive the next number by V. P. P. for the arrears due.**

### நமது சந்தாதாரர்களுக்கு.

நமது சந்தாதாரர்களிற்சிலர் இன்னும் 10-வது வாலியமுக்குரிய சந்தாவைச் செலுத்தவில்லை. இவர்களும் மற்றவர்களும் 10, 11-வது வருஷப்புத்தகங்களுக்குரிய சந்தாவையும் 12-வது வாலியத்துக்குள்ள சந்தாவையும் உடனே அனுப்பல் வேண்டும். அல்லது அடுத்த சஞ்சிகையை பாக்கி யுள்ள சந்தாதொகைக்கு V. P. P. மூலமாக அனுப்புவதைப் பெற்றுக்கொள்ளல் வேண்டும்.

**D. K. Agency.**

20*th May*, 1905. அ. ட. ஏஜன்ஸி.

# "ANANDA MISSION"

## For the Propogation of Truth and Knowledge.

**As the Way to Health, Happiness and Life, Through Self-Help, Self-Control and Self-Culture.**

***"EKAM SATYAM BRAHMA."—SRUTIVAK.***

"Seek Truth wherever you can find it,"
"But Make your Choice and Stick to it"
till you reach the end.

"*Truth is hard Finding !*" **Yes,** "*Uncompromising too*" **when** *whole*; **Yet Try!** "*Awake, Arise and Stop not till you reach the Goal.*"—*Sruti.*

'And Ye shall Know the Truth and the Truth shall make you Free"—Christ.

All persons who love Truth for its own sake and are willing to show good-will towards All, regardless of race, creed, religion, caste or color, will be eligible to become members, helpers or sympathisers of the Mission as it may suit their intelligence, development and selfless state.

Sincerity in thought, word and deed, an essential and unfailing condition to be scrupulously fulfilled by all.

***Satyameva Jayati.***

**Hail! Ananda Natesa!**

*Sri Akandananda Satguruve Namaha.*

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs, 5 per annum.

Single Copy 7½ As.: Back Nos. 8 As. each.

**English & Foreign Subscription 7s. 6d. net per annum.**

**Thin Paper Edition** for the People :—

**Subscrn. Price: Yealy Rs. 4; Half-yearly Rs. 2-2.**

**Sincle copy, current No. 5½ As.; Back Nos. 6 As. Each.**

**English & Foreign Subscription 5s. 6d. net per annum.**

**If strictly Prepaid** at the commencement of the term, (*i.e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As, off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months' grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and avoid vexatious delay and needless correspondence.

### விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

**தளபான காகிதப்பதிப்பு:—** அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி 7½ அணா. பழைய பிரதி 8 அணா.

**லேசானகாகிதப்பதிப்பு:—** சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி 5½ அணா. பழைய பிரதி 6 அணா.

**வருஷாரம்பத்திலே** (அதாவது மேமாசத்தில்) தவருமல் கட்டினல் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

எப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தா தாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சாந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்து கொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினல் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்கு வரவுக்கு மிடமிராது.